KALKI 25.7.93 ரூ. 3.00

# கல்கி

## இவர்கள் சிரிப்புக்கு







## இவர் காரணம்!




● பாலுக்குப் பற்றாக்குறை

● தண்ணீரும் பிரச்னை

● காஸ் சிலிண்டர் கிடைப்பதிலும் தகராறு

● மேல்நிலைப் பள்ளி இல்லை

● இருக்கும் பள்ளியிலும் ஆசிரியர்கள் பற்றாக்குறை

● போஸ்ட் ஆபீசுக்கு மூன்று கிலோ மீட்டர் போக வேண்டும்

● பல்லவன் வருவதில்லை

– இவ்வளவு பிரச்னைகளுக்கிடையிலும் தைரியமாகப் போராடிக் கொண்டிருக்கும்

# மறைமலை நகர் வாசிகளுக்கு ஜே!


* சுப்பாராவ்

"கவர்ச்சியான விளம்பரங்களைப் பார்த்து ஏமாந்து இங்கே வந்து விட்டோம்" என்கிறார் மறைமலை நகர் குடியிருப்போர் நலச் சங்கத்தின் பொதுச் செயலாளரான விங்கேஸ்வரன்.

சென்னையை ஒட்டிய பெரிய புறநகர்க் குடியிருப்பான மறைமலைநகரில் இப்போது 3000க்கும் அதிகமான வீடுகள் உள்ளன. சுமார் 35,000 மக்கள் இப் பகுதியில் வசிக்கிறார்கள். 1980 இல் முதல் கட்டமாக 144 வீடுகள் இப் பகுதியில் தமிழக அரசால் கட்டப்பட்டன. தலைநகரின் நெரிசலைக் குறைக்க உதவும் 'சாடிலைட்' டவுனாக மறைமலைநகர் மளமளவென்று வளரும் என எதிர்பார்க்கப்பட்டது.

* வேலை செய்யாத பம்பிங் ஸ்டேஷன்





ஆனால் இன்று - பதின்மூன்று ஆண்டுகள் சென்றும் - மறைமலை நகர்வாசிகள் பல அடிப்படை தேவைகளுக்கே அல்லாடிக் கொண்டிருக்கிறார்கள்!

''சென்னை நகரத்து வசதிகள் எல்லாமே இங்கே கிடைக்கும் என்றார்கள், ஆனால் ஒவ்வொன்றுக்கும் போராட வேண்டியிருக்கிறது. காலையில் எழுந்ததிலிருந்து பிரச்னைகள்''தான் என்கிறார் விங்கேஸ்வரன்.

''நகரின் பால் தேவை 4000 லிட்டர். ஆனால் கிடைப்பதோ வெறும் 400 லிட்டர்தான். தானியங்கி பால் வழங்கு நிலையம் வைக்க வேண்டும் என்று ஆவின் நிறுவனத்துக்கு எழுதினால், ஆவினோ, 'நிலத்தைக் கொடுங்கள்' என்கிறது. எம்.எம்.டி.ஏ.விடம் நிலம் கேட்டால், வர்த்தக ரீதியில் (commercial rate) என்ன விலைக்கு விற்குமோ அதே விலையைச் சொல்கிறது. 'மக்களின் தேவைகளை நிறைவேற்றுவதில் எம்.எம்.டி.ஏ.வுக்கு உள்ள அக்கறையைப் பாருங்கள்!'' என்கிறார் விங்கேஸ்வரன்.

கமர்ஷியல் ரேட் ஏகமாக இருப்பதால், நகரில் பல இடங்களில் எம்.எம்.டி.ஏ. கட்டியுள்ள கடைகள் காலியாகவே உள்ளன. ஒதுக்கப்பட்ட வீடுகளிலேயே கடைகள் வைக்கப்பட்டுள்ளன. இது விதிகளுக்கு முரணானது. ஆனால் எம்.எம்.டி.ஏ. கண்டுகொள்வதில்லையாம்.

குடியிருப்போர் சங்கம் எம்.எம்.டி.ஏ.விடம் போராடி இரண்டு கிரவுண்டு நிலத்தை நூலகத்துக்காக வாங்கியது. ஆனால் நூலக நிர்வாகம், நூலகம் வைக்காமல் டபாய்த்துக் கொண்டு இருக்கிறதாம். இத்தனைக்கும் நூலக வரியாகச் சுமார் ஐந்து லட்சம் சொத்து வரியோடு வசூலிக்கப்பட்டிருக்கிறதாம். நகரில் ஒரு ஆரம்ப சுகாதார நிலையம் இருக்கிறது. ஆனால் அங்கு டாக்டர்கள்தான் சரியில்லை. சென்னையிலிருந்தும் செங்கல்பட்டிலிருந்தும் வந்து சில மணி நேரம் தங்கி விட்டுப் போவதோடு சரி.

''இரவு நேரத்திலும் டாக்டர் வசதி வேண்டும். மேலும் பிரசவ வார்டு கட்டிக் கொடுக்க வேண்டும். சமயத்தில், இரவில், கர்ப்பிணிப் பெண்களின் பாடு திண்டாட்டமாகப் போய் விடுகிறது! செங்கல்பட்டுக்கோ, தாம்பரத்துக்கோ போக வேண்டியிருக்கிறது. இங்கே ஆஸ்பத்திரியில் ஒரு வண்டி இருந்தது. அதுவும் இப்போது இல்லை. ரொம்ப கஷ்டம்தான்'' என்கிறார் லட்சுமி.

தற்போது நகரை உலுக்கும் பிரச்னை தண்ணீர்ப் பிரச்னைதான். ''பாலாறில், ஆயப்பாக்கம் என்ற இடத்திலிருந்து கொண்டு வருகிறார்கள். மின்தடங்கல் காரணமாகச் சரியாகத் தண்ணீர் சப்ளை இல்லை. குடிநீர் வடிகால் வாரியம், தண்ணீரை அனுப்புகிறது. விநியோகிக்கும் பணி நகரியத்திடம்!

''ஒரு விஷயத்துக்கு இப்படி பல ஏஜென்ஸிகள் செயல்படுவதில் சிக்கல் உள்ளது. விளைவு தண்ணீர்ப் பஞ்சத்தில் நாங்கள் கஷ்டப்படு


* நாராண துலுக்காநாதன்


* விங்கேஸ்வரன்


* ஆராமுதன்


* லட்சுமி


* ராமச்சந்திரன்


* நூலகத்துக்காக ஒதுக்கப்பட்ட இடம்.

## எம்.எம்.டி.ஏ. என்ன சொல்கிறது?

(சென்னைப் பெருநகர் வளர்ச்சிக் குழுமத்தின் (MMDA) உறுப்பினர் - செயலாளர், பீந்து மாதவன், ஐ.ஏ.எஸ்.; அவர்களைச் சந்தித்தோம்)

**ம**றைமலைநகரை பிரமோட் செய்த ஏஜென்ஸி என்ற முறையில் எம்.எம்.டி.ஏ. அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொடுத்தது. நகரை நிர்வகிக்கும் பொறுப்பு நகரியத்துடையதுதான் என்றாலும், எம்.எம்.டி.ஏ.வும் தன்னால் இயன்ற வளர்ச்சிப் பணிகளைச் செய்து வருகிறது.

● போலீஸ் ஸ்டேஷன், தீ அணைப்பு நிலையம், நூலகம் ஆகியவற்றுக்கு இலவசமாக நாங்கள் இடம்கொடுத்துள்ளோம். அதே ரீதியில் ஆவின் நிறுவனத்தையும் நாங்கள் சேர்த்துக் கொள்ள இயலாத நிலையில் இருக்கிறோம். அரசின் இப்போதைய கொள்கையின்படி, ஆவின் நிறுவனத்துக்கு நிலத்தைக் குத்தகையில் வழங்க முடியாது; ஒரேயடியாக விற்கத்தான் முடியும். அரசு வங்கிகளுக்குக் கூட நாங்கள் நிலத்தை விற்றுத்தான் இருக்கிறோம். நீண்ட கால நோக்கில் பார்த்தாலும் ஆவின் நிறுவனம் தானியங்கி பால் நிலையத்துக்குச் சிறிய இடமாகப் பார்க்காமல், சற்று பெரிய இடமாக வாங்கிப் போட்டார்கள் என்றால் எதிர்காலத்தில் அலுவலகம் போன்றவற்றை வைத்துக் கொள்ள வசதியாக இருக்கும்.

● ''நிலத்துக்கு மட்டும் ஸ்டாம்புக் கட்டணமா அல்லது அதன்மேல் உள்ள கட்டட மதிப்பையும் சேர்த்து ஸ்டாம்புக் கட்டணம் வசூலிக்க வேண்டுமா'' என்ற வழக்கு தற்போது சுப்ரீம் கோர்ட்டில் நிலுவையில் உள்ளது. அதில் அரசுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வந்தால் நிலம் + கட்டடம் இரண்டையும் சேர்த்துத்தான் மதிப்புப் போட வேண்டும். கட்டடத்தின் மதிப்பு சேர்க்காமல் ஸ்டாம்புக் கட்டணம் கட்டிய வீட்டு வசதி வாரிய ஒதுக்கீட்டாளர்களும் அப்போது கட்டட மதிப்புக்குக் கூடுதலாக ஸ்டாம்புக் கட்டணம் கட்ட வேண்டி வரும்.

கிறோம்'' என்கிறார் ஆராமுதன்.

நகரில் உள்ள ஏரிகள் முற்றிலும் வறண்டு விட்ட நிலையில், கிணறுகளிலும் தண்ணீர் காலி.

இந்தச் சூழ்நிலையில், ஏரிப் பகுதிகளிலும் வீட்டு வசதி வாரியம் வீடுகள் கட்ட இருக்கிறதாம்! எத்தனை ஏரிகள் பலியாகுமோ!

''இப்போது என்.ஹெச். (NH-1) ஒன்றில் தபால் அலுவலகம் இருக்கிறது. இது என்.ஹெச். மூன்றில் இருந்து மூன்று கிலோ மீட்டர். இதனால் என்.ஹெச். மூன்றிலும் கிளைத் தபால் அலுவலகம் வைக்க வேண்டும்'' என்று கேட்டால் தபால் நிர்வாகம் முரண்டு பிடிக்கிறது'' என்கிறார் நாரண ஜெகன்னாதன்.

''நகரில் மேல்நிலைப் பள்ளி இல்லாதது ஒரு குறை. அரசைக் கேட்டால் மேட்சிங் கிராண்ட்டாக (Matching grant) இரண்டு லட்சம் ரூபாய் வேண்டுமாம். எங்கே போவது. சரி போகட்டும், இருக்கிற உயர்நிலைப் பள்ளியாவது ஒழுங்காக இருக்கிறதா? 16 ஆசிரியர்கள் இருக்க வேண்டிய இடத்தில் 6 பேர்கள்தான் இருக்கிறார்கள்!'' - இது ராமச்சந்திரன்.

**பூ**ங்காவுக்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் பூங்கா இல்லை; சாலைகள் குண்டும் குழியும்; கழிவுநீர் பம்பிங் ஸ்டேஷன் செயல்படவில்லை; கூடுவாஞ்சேரி வரை வரும் பல்லவன், நகருக்கு வருவதில்லை என்று மறைமலைநகரில் ஏகப்பட்ட புகார்கள்.

''எம்.எம்.டி.ஏ.விடம் கேட்டால், '1986ல் நகரியம் அமைக்கப்பட்டு விட்டது. நகரியம்தான் எல்லாம் செய்ய வேண்டும் என்கிறார்கள். இத்தனைக்கும் ஆறு மாதத்திற்கொருமுறை கரெக்டாக வரி வசூலித்து விடுகிறார்கள். ஆனால் வசதிகள் செய்வதில் கணக்கம்'' என்கிறார் சுப்பாராவ். ''நாங்கள் குரலெழுப்பினால், 'மறைமலை நகருக்கு மட்டும் செய்தால் போதுமா... சுற்றியுள்ள ஏழு கிராமங்களும் எங்கள் நகரிய எல்லைக்குள்தான் இருக்கின்றன. அவர்களுக்குச் செய்ய வேண்டாமா?' என்கிறார்கள். போதாததற்கு நகரியத்தில் எங்களுக்குப் பிரதிநிதி கிடையாது. அலுவலகர்களும் அ.தி.மு.கவினரும்தான் உள்ளனர். நாங்கள் பிரதிநிதித்துவம் கேட்டால் சட்டப்படி நீங்கள் மெம்பர் ஆக முடியாது என்று சொல்கிறார்கள்'' என்கிறார் குடியிருப்போர் நலச் சங்கத்தின் தலைவரான சுப்பாராவ்.

**ம**றைமலைநகர் வாசிகளின் தேவையை மனத்தில் கொண்டு, ஏற்படுத்தப்பட்ட இண்டேன் காஸ் ஏஜென்ஸி எட்டு கி.மீ. தூரத்தில் வண்டலூரில் வைக்கப்பட்டிருக்கிறதாம். கிராக்கி அதிகமாகிக் கொண்டே போவதால் 'அவ்வளவு தூரம் கொண்டு வந்து போட மாட்டோம்' என்று இப்போது

● மறைமலை நகருக்கென்று தனி பாலாறு குழாய் வருகிறது.

● சில ஆக்ரமிப்புகள், வீடுகளில் கடைகள் வைத்துக் கொண்டிருப்பது போன்ற விதி மீறல்கள் எம்.எம்.டி.ஏ.வுக்குத் தெரியாததல்ல. வேண்டிய நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம்.

● மறைமலை நகரை ஒட்டி 'நகர் மையம்' (Town Centre) ஒன்று வர இருக்கிறது. கடைகள், பொழுதுபோக்கு இடங்கள் போன்றவை அங்கு அமையும். அந்தப் பகுதி மக்கள் சென்னைக்கும் செங்கல்பட்டுக்கும் போக வேண்டிய அவசியம் இருக்காது.

● ஏரிப் பகுதியில் வீடுகள் கட்டும் திட்டம் தற்போது ஒன்றும் இல்லை. அந்தப் பகுதி மக்களுடன் அடிக்கடி நாங்கள் உரையாடி, குறைகளைத் தெரிந்து கொள்கிறோம். நகரியத்தில் எங்களுக்குப் பிரதிநிதித்துவம் இருப்பதால் அவர்களின் குறைகளை அங்கே சொல்கிறோம்.

● பார்க், சினிமா தியேட்டர் போன்றவற்றுக்கு நிலம் இருக்கிறது. பார்க் உருவாக்குவது நகரியத்தின் வேலை. மறைமலை நகரில், சினிமா தியேட்டருக்கு ஒதுக்கப்பட்ட நிலத்தை வாங்க இதுவரை யாரும் முன்வரவில்லை.

காஸ் ஏஜென்ஸி தகராறு செய்கிறதாம். நகரத்துச் சமூகக்கூடம் ஒன்று இருக்கிறது. ஆனால் அங்கு பாத்திரங்கள், நாற்காலி, மேசைகள் கிடையாது.

1980ல் குடிவந்த 144 பேர்களுக்கு எம்.எம்.டி.ஏ. இப்போது விற்பனைப் பத்திரம் போட்டுக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதிலும் சிக்கல். நிலம் + கட்டடத்தின் மதிப்பின் மேல் ஸ்டாம்புக் கட்டணம் போடுவோம் என்கிறார்களாம். ஆனால் இதே நகரில் உள்ள, வீ.வ. வாரியத்தின் எல்.ஐ.ஜி. வீடுகளைப் பத்திரம் போடும் போது நிலத்தின் மதிப்பை மட்டும் எடுத்துக் கொண்டார்கள்.

''ஒரே இடத்தில் உள்ள கட்டடங்களுக்குள் ஏனிந்த வேறுபாடு?'' என்று கேள்வி யெழுப்புகிறார் கப்பாராவ்.

முன்பெல்லாம் எம்.எம்.டி.ஏ. மாதம் ஒருமுறை குடியிருப்போர் நலச் சங்கத்துடன் சந்திப்பு நடத்துமாம். இப்போது 'நகரியம் உண்டாக்கப்பட்டு விட்டதே அங்கே போய்ச் சொல்லுங்கள்' என்று சொல்கிறார்களாம். ''எங்கள் குறைகளை எடுத்துக் கொண்டு அரசு அலுவலகங்களுக்கு அலைந்தே வாழ்க்கை கரைந்து விடும் போலிருக்கிறது'' என்று சொல்லி வருத்தப்பட்டார் கப்பாராவ்.

– ப்ரியன்

படங்கள் : கோபிநாத்



# அமெரிக்காவில் ஓர் அபூர்வ மியூஸியம்!

ஏப்ரல் 23, 1993 – ராவுல் வால்லன்பர்க் (வாஷிங்டன்) [illegible] ஜனாதிபதி கிளின்டன் அமெரிக்க ஹோலோகாஸ்ட் மியூஸியத்தைத் திறந்து வைத்தார். மிகுந்த சர்ச்சைக்குரியதாகக் கருதப்படும் இம்மியூஸியம், ஹிட்லர் பதவியிலிருந்த 12 ஆண்டுகளில் ஆரியரல்லாத இன ஒழிப்பு எவ்வாறு நடந்தது என்பதைச் சித்தரிக்கும் விதமாக அமைந்துள்ளது. ஐந்து மாடிக் கட்டடத்தில் மேலிருந்து நான்கு மாடிகள் முழுக்க முழுக்க கலங்கவைக்கும் அழிவுச் சின்னங்கள். உள்ளே சுற்றிப் பார்க்க 'சிறப்பு மனப் பயிற்சி' வேண்டும்! அத்தனை பயங்கரம்! அனுமதி இலவசம் என்றாலும் முன்னதாக டிக்கெட் ரிசர்வ் பண்ணியிருந்தாலொழிய உள்ளே போக முடியாது, அத்தனை கும்பல்!

அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி ஜிம்மி கார்ட்டரால் 13 வருடங்களுக்கு முன், 265,000 சதுர அடி பரப்பில் 168 மில்லியன் டாலர் செலவில் உருவான இம் மியூஸியம் இப்போதுதான் பொது மக்கள் பார்வைக்குத் திறக்கப்பட்டிருக்கிறது!

இதனை உருவாக்கிய கட்டடக்கலை வல்லுனர் ஜேம்ஸ் இங்கோ ஃப்ரீட், நாஜி கொடுமையிலிருந்து தப்பியவர் என்பது குறிப்பிட வேண்டிய விஷயம்.

– வாஷிங்டன் ஸ்ரீதரன்.

* அனுராதா

கபில்தேவுக்கு முழங்காலில் பிடிப்பா?

கூப்பிடுங்கள் சித்தார்த்தனை.

சச்சின் டெண்டுல்கருக்கு முதுகில் வலியா?

இருக்கவே இருக்கிறார் சித்தார்த்தன்.

சித்துவுக்கு முழங்கால் மூட்டு இறுக்கமா?

சித்தார்த்தன் நிமிடத்தில் சரி செய்து விடுவார்.

மனோஜ் பிரபாகருக்குத் தோள்பட்டை வலியா?

சித்தார்த்தன் கைபட்டால் உடனே சரியாகி விடும்.

யார் இந்த சித்தார்த்தன்?

விளையாட்டுகள் சம்பந்தப்பட்ட உடற்பயிற்சிக் கலையில் தேர்ந்தவர்; ஜெர்மனியில் பயிற்சி பெற்றவர். சிட்னியில் இருக்கும் ராயல் நார்த் ஷோர் மருத்துவ மனையில், ஆஸ்திரேலிய ஸ்போர்ட்ஸ் மெடிசின் ஃபெடரேஷன் கோர்ஸில் தேர்ந்த நிபுணர். ஆட்டக்காரர்கள் முகத்தில் தெரியும் வலியின் வேதனை மறைந்து சிரிப்பு பளிச்சிடச் செய்பவர்.

இந்தியாவிலேயே இந்தத் துறையில் இவர் ஒருவர்தான் ப்ரொஃபஷனல். பல வகைப்பட்ட விளையாட்டு வீரர்களுக்காக, இதுவரை சுமார் 50க்கு மேற்பட்ட பயிற்சி முகாம்கள் நடத்தி விட்டார்.

''ஜெர்மனிக்குப் போய் பயிற்சி பெற்று, நிறைய எதிர்பார்ப்புகளுடன் இந்தியாவுக்குத் திரும்பினேன். ஸ்போர்ட்ஸ் அசோசியேஷன்கள், ஸ்கூல்கள் எல்லாவற்றிலும் போய்ப் பார்த்தேன். என்னை யாரும் அப்போது சீரியஸ்ஸாக எடுத்துக் கொள்ளவில்லை. 'எங்களுக்கு என்ன லாபம்?' என்று கேட்டார்கள். 'பயிற்சி எடுத்துக் கொள்பவருக்குத்தான்



* பயிற்சிகள்....

லாபம்!' என்று சொல்லி விட்டு வந்து விட்டேன்!'' என்றார் சித்தார்த்தன்.

ஸ்ரீலங்காவுக்குப் புறப்படும் முன், இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரர்களின் உடலை ட்ரிம்மாக வைத்துக் கொள்ளும் பயிற்சிகளில் ஈடுபட்டிருந்தார் சித்தார்த்தன். சேப்பாக்கம் மைதானத்தில் நெட் பிராக்டீஸ் முடிந்து ஒவ்வொருவராக வரவும், அவர்களைத் தனித்தனியே 'கவனித்து'க் கொண்டார்!

பிரவீண் ஆம்ரேயின் கால் தசைகளை இறுக்கத்திலிருந்து தளர்த்தினார். அனில் கும்ப்ளேயின் கால்களுக்கு மடித்தும் நீட்டியும் பயிற்சி கொடுத்தார்; பச்சைக் குதிரை

# சாம்பியன்களின் சாம்பியன்
# சித்தார்த்தன்!

தாண்ட, குனிந்து உட்காருகிற மாதிரி உட்கார்ந்து கொண்டார். கும்ப்ளே அவர் முதுகின் மீது மல்லாக்க விழுந்து, வில்லாக வளைந்தார். அஜய் சர்மாவின் முதுகை நிமிர்த்தினார்...

''முன்பு ஐந்து நாள் டெஸ்ட் மாட்சில் ஃபிட்னஸ் முக்கியம்னு நினைக்கல்லை. இப்போது ஒன்-டே கிரிக்கெட் வந்த பிறகு ஃபிட்னஸ் அத்தியாவசியமாயிடுச்சு. ஒரே நாளில் ஃபீல்டிங் போலிங், பேட்டிங் செய்யும் போது அதிகச் சுறுசுறுப்பு தேவைப் படுகிறது.

''கணுக்காலில் பிடிப்பு - கிராம்ப்ஸ் - வந்து விடுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள், நான் உடனே மற்ற தசைகளை லூஸ் ஆக்கி, பிடிப்பைச் சரிபண்ணி விடுவேன்! அசாருக்குக் காலில் ஆடு சதையில் பிடிப்பு ஏற்பட்ட போது இப்படித்தான் செய்தேன். என்னுடையது லேட்டஸ்ட் டெக்னிக்'' என்



✱ சித்தார்த்தன்

றார் சித்தார்த்தன்.

''கிராம்ப்ஸ் வந்த போது இவர் எனக்கு உடனடியாகச் சரிபண்ணினார். தொடர்ந்து ஆடி ஐந்து விக்கெட்டுகளை வீழ்த்தினேன்!'' என்று புகழ்ந்தார் கபில்தேவ். ''கிராம்ப்ஸை மட்டும் யாரும் இங்கே சரியா அட்டென்ட் பண்ணுவதில்லை. எனக்குத் தெரிந்து, இவர் மட்டும்தான் இதைச் செய்கிறார்!''

''எந்தெந்த விளையாட்டுக்கு எந்தெந்













தத் தசை மிருதுவாகப் பயன்படுத்தப்படுகிறது என்று எனக்குத் தெரியும். அதற்குத் தகுந்த மாதிரி எக்சர்சைஸ் சொல்லிக் கொடுப்பேன். ஒரு போலர், ஒரு குறிப்பிட்ட 'போஸி'ல் பந்து வீசுவார். ஒரே மாதிரியான ஆக்ஷனாக இருக்கும். அதே தசைகள்தாம் திரும்பத் திரும்ப ஸ்ட்ரெயின் ஆகும். 15 ஓவர் போட்ட பிறகு அவை இறுகிக் கொண்டு விடும். மறுநாள் எளிதாக போலிங் செய்ய முடியாது. நான் இதற்குக் கையாளும் பயிற்சி - ஸ்ட்ரெட்சிங். சுலபமாக இதைச் செய்வேன். அனுபவம், தன்னம்பிக்கைதான் காரணம்!'' என்கிறார் சித்தார்த்தன்.

பயிற்சியில் சரியாகாத பிரச்னை என்றால் ஐஸ் வைப்பது, ஒத்தடம் தருவது போன்ற சில சிகிச்சைகள் உள்ளன. அதுவும் போதாதென்றால்தான் மருந்து.

''வெளிநாடுகளில் ஒரு பிளேயருக்கு ஒரு ட்ரெயினர் இருக்கிறார். வருடம் முழுக்க டிரெய்ன் பண்ணுவார். அந்த அளவுக்கு நமக்கு இங்கே முடியாது. ஆனால் நாம் மூன்று மாதம், ஆறு மாதமாவது தொடர்ந்து ஃபிட்னஸ் காம்ப் நடத்த வேண்டும். அப்படிச் செய்தால் நாம் நிச்சயம் உலகக் கோப்பையைப் பெற முடியும். நம்மிடம் டெக்னிக் இருக்கிறது. சக்திதான் தேவை. பாருங்கள், வாடேகரோடு எப்படிக் கடுமையாகச் சேர்ந்து உழைக்கிறார்கள்! வருடம் முழுக்க எக்சர்சைஸ் பண்ணணும்; சமச்சீரான உணவு சாப்பிடணும்; சரியான விதத்தில் ஓய்வும் எடுக்கணும்'' என்கிறார் சித்தார்த்தன்.

அருகிலிருந்த அசாருதீனிடம், ''ஏன், இவரை உங்களுடன் ஸ்ரீலங்காவுக்கு அழைத்துப் போகவில்லையா?'' என்று கேட்டோம். ''அவர்தான் வர மாட்டேன் என்கிறார். கூட இருந்தால் நிச்சயம் தெம்புதான். வருகிறீர்களா சித்தார்த்தன்? என் தனி ரூம் இருக்கிறது. நீங்கள் ஜாலியாகத் தங்கிக் கொள்ளலாம்!'' என்றார் சித்தார்த்தனிடம்.

''தென் ஆப்ரிக்காவுக்குக் கூடக் கூப்பிட்டார்கள். எனக்கு இங்கேயே நிறைய கமிட்மென்ட் இருக்கிறதே!'' என்றார் சித்தார்த்தன்.

''மூன்று வார காம்ப் மிகவும் அவசியம். அதிலும் சித்தார்த்தனின் ஸ்ட்ரெட்சிங் டெக்னிக்குகள் நவீனமானவை. உடனடியாகப் பலன் தருபவை!'' என்றார் அசாருதீன்.

''ஜெர்மனியில் இது மாதிரி விஷயங்களில் நிறைய ஆராய்ச்சி செய்கிறார்கள். ஆனால் அவர்கள் கண்டுபிடிப்பை வெளியிடுவதில்லை. ஆஸ்திரேலியாவில் அப்படி அல்ல. அவர்கள் வெளியிடுகிறார்கள், பிறருக்கும் உபயோகப்படட்டும் என்று!'' என்கிறார் சித்தார்த்தன். இங்கே எம்.ஆர்.எஃப். பவுண்டேஷனுக்கு டெனிஸ் லில்லியுடன்

வந்த பிஸியோ தெரபிஸ்ட்டிடமிருந்தும் சித்தார்த்தன் நிறையக் கற்றுக் கொண்டாராம்.

ஸ்ரீகாந்துக்கு பர்சனல் ட்ரெயினராக இருந்திருக்கிறார் சித்தார்த்தன். ''நான் கபில், ஸ்ரீகாந்த் ஃபேன். ஸ்ரீகாந்த் முதல் மாட்ச் ஆட ஆரம்பித்ததிலிருந்தே நான் அவருடன் பழகினேன். இந்த இரண்டு பேருக்குமே நான் உதவி செய்ய முடிந்தது என் அதிர்ஷ்டம்!''

''விடுமுறைக்கு இந்தியா வரும் போதெல்லாம் இவரைத் தேடிப் போய் பயிற்சி எடுத்துக் கொள்ளுகிறேன்!'' என்றார் இளம் டென்னிஸ் ஆட்டக்காரர் அநுராதா லட்சுமண். பதினோறே வயதான குற்றாலீசுவரன் இங்கிலீஷ் சானலைக் கடக்கப் போகிறார். சித்தார்த்தன் இப்போது இவருக்குப் பயிற்சி அளித்து வருகிறார். நீச்சல் வீரர் ராகுல் ராமச்சந்திரன், சரவண சுப்பிரமணியன், நேஷனல் ட்ரையதலான் (சைக்கிள் - ஸ்விம்மிங் - ரன்னிங்) வீரர் ஆறுமுகம், சி. அமுதா எல்லாருமே இவரது ஸ்டூடண்ட்ஸ்.

சித்தார்த்தனின் பயிற்சிகள் காலை சுமார் நாலு மணிக்கே ஆரம்பமாகின்றன. பதினோரு மணி வரை நடக்கின்றன. பிறகு பிற்பகல் மூன்று மணிக்குத் தொடங்கினால் இரவு எட்டு மணிக்குத்தான் முடிகிறது. இவர் நடத்தும் பயிற்சி வகுப்புகளில் இப்போது சுமார் இருபது டாக்டர்களும் பயிற்சி பெறுகிறார்களாம். விளையாட்டு வீரர்களுக்கு மட்டுமல்லாமல், வீட்டுப் பெண்மணிகளுக்கும் கீழ்முதுகுவலி, மூட்டு வலி, கணுக்கால் வலி எல்லாவற்றையும் குணப்படுத்துகிறார் சித்தார்த்தன். தொழிலதிபர் ஓபுல் ரெட்டி வீட்டில் எல்லாரும் நடந்தே திருப்பதி செல்லுவதற்கு முன், கால்களுக்குப் பயிற்சி எடுத்துக் கொண்டார்களாம்!

''கமல், சரத்குமார் எல்லாம் கூப்பிட்டார்கள் பயிற்சி தரச் சொல்லி. எனக்கு சினிமா ஃபீல்டில் இன்ட்ரஸ்ட் இல்லை. ஸ்போர்ட்ஸ் ஃபீல்டுக்குத் தொண்டு செய்து புகழ் பெறணும். அதனால் ஃபீஸ் வாங்காமலே கூட நிறைய ஏழைக் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுக்கிறேன். Deaf and Dumb பள்ளியிலும் இலவசமாகவே சொல்லிக் கொடுக்கிறேன்!'' என்றார்.

சின்னக் குழந்தைகள் ஏழு வயது முதல் பன்னிரண்டு வயது வரை எக்சர்சைஸ் செய்தால், பிறகு முதுகுத் தண்டு தொடர்பான கோளாறு எதுவுமே வராது என்கிறார் சித்தார்த்தன்.

''யாரை வேண்டுமானாலும் சாம்பியன் ஆக்கி விட முடியும். எல்லாமே அவரவர் மனத்தில் இருக்கும் உறுதியில்தான் இருக்கிறது!'' என்கிறார் அழுத்தமாக.

பேட்டி, கட்டுரை : சாருகேசி
அட்டை வண்ணப்படங்களும்,
புகைப்படங்களும் : கோபிநாத்

# வட்டமேஜை

◆ பா.ஜ.க.வின் அரசியல், பொருளாதார கொள்கைகளை அலசி ஆராய்ந்து, அக்கட்சியின் நிறை, குறைகளை மற்ற கட்சித் தலைவர்கள் மூலம் விளக்கியது பாராட்டத்தக்கது. அத்வானியின் அட்டைப்படம் வெகு ஜோர்!

காரைக்குடி, இ. சுரேஷ்.

◆ எல்.கே. அத்வானி அடுத்த பிரதமராக வருவது காலத்தின் கட்டாயம். அவர் காலத்தில் இந்தியா பெருமைப்படப் போவதையும் ஜாதி அரசியலில் குளிர்காய்ந்து கொண்டிருப்பவர்கள் சிறுமைப்பட்டுத் திருந்தப் போவதையும் கண்கூடாகக் காணும் நாள் வெகுதூரத்தில் இல்லை.

செஞ்சி, கே. ஆர். குப்புதாஸ்.

◆ அத்வானி பிரதமரானால், ஹர்ஷத் யாரிடம் ரூ 1 கோடி கொடுத்தேன் என்பதாம்? அர்ஜுன் சிங்கும், சரத் பவாரும் யாரிடம் மோதுவதாம்? வீரப்ப மொய்லிக்குப் பிறகு அடுத்த முதல்வரை யார் சிபாரிசு செய்வதாம்? சோனியாவிடம் யார் கூழைக் கும்பிடு போடுவதாம்...?

பொன்மலை, துரை. நாகராஜன்.

◆ லக்ஷ்மி இன்று தமிழ்ப் பெண்களின் அரசியல் விழிப்புணர்ச்சியைப் பற்றிப் பேசுகிறார். உப்பு, புளி, பாமாயில், ரேஷன் பிரச்னைகள் நாட்டின் அரசியல் தலைமையையே மாற்றியமைக்கும் சக்தி வாய்ந்தவை என்பது அவர் அறியாதது போலும்.

நாகை, சந்திரா.

◆ கருவின் குற்றமா? கலைஞர் குற்றமா? - கட்டுரையில் ஒரு விஷயம் தெளிவாய் தெரிந்தது: இவ்வளவு காலம் ஒற்றுமை - மன உறுதி யுடன் செயல்பட்ட ஒரு கட்டுக்கோப்பான கட்சியில் ஏற்பட்ட பூசல், ஒரு ஊனத்தை ஏற்படுத்தி விடுமானால் அதைச் சரிகட்டவே முடியாது.

பாண்டிச்சேரி, தா. செல்வராசன்.

◆ இதுவரை எந்த தமிழ் பத்திரிகையும் வெளியிடாத மேதா பட்கரின் பேட்டியைப் பிரசுரித்துள்ளீர்கள். சாதாரண ஏழைக் குடும்பத்தில் பிறந்து அப் பகுதி மக்களின் துயரம் கண்டு பொங்கி, ஆவேசமாய்த் தானும் எழுந்து, மக்களையும் எழுப்பி, நாலாந்தர அரசியல்வாதிகளை நடுங்கச் செய்யும் மேதா பட்கர் அல்லவா உண்மையிலேயே புரட்சித் தலைவி!

மருங்கூர், பால. கிருஷ்ணமூர்த்தி.

◆ 'நாம் நஷ்டப்பட்டாலும் மக்களுக்கு நன்மை விளைந்ததே' என்று மகிழும் வித்தியாசமான கதாபாத்திரத்தை 'இரண்டாவது பேருந்து' சிறுகதையில் அறிமுகப்படுத்திய திருவாரூர் பாபுவுக்குப் பாராட்டுக்கள்.

கடையால், அ. செபாஸ்டின்.

◆ 'குடை' சிறுகதை தமிழ் சிறுகதை இலக்கியத்துக்கே குடை பிடித்ததுபோல் அமைந்து விட்டது. முடிவில் இன்னும் கொஞ்சம் கவனம் செலுத்தியிருந்தால், புதூர் வள்ளுவன் பழைய வள்ளுவனாகவே பரிணமித்திருப்பார்.

திருச்சி - 14, தமிழினியன்.

**'உழைப்பாளி விமர்சன மசாலா டீ'**

| | |
|---|---|
| வித்தியாசம் - | 1000% |
| நையாண்டி - | 1000% |
| ஒப்பிடுதல் திருப்பணம் - | 1000% |
| நெத்தியடி - | 1000% |
| வாசகர் நிறைவு - | 2500% |
| ரஜினி ரசிகர் நிறைவு - | 1495% |
| வாசுவின் நிறைவு - | 0005% |
| மொத்தம் - | 8,000% |

இளையூர், ஆர். விஜி.

◆ எம்.ஜி.ஆர். எத்தனை பேருடைய வாழ்வில் ஒளிவிளக்காய்த் திகழ்ந்திருக்கிறார் என்பதும், அவர் தந்த 'ஒளிவிளக்கு' பரிசு காணாமல் போய்த் திரும்பக் கிடைத்த விதமும் ஆச்சரியத்தை அளித்தது. பணம் வேலை செய்யாமல், 'எம்.ஜி.ஆர்.' எனும் தாரகமந்திரம் மாத்திரமே வேலை செய்தது!

பொள்ளாச்சி, என். சித்தாலட்சுமி.

◆ 'ராஜீவ்ரெனின் பேட்டி', 'நில், கவனி, வெற்றி கொள்' என்ற தொடர் கட்டுரைத் தலைப்பின் கீழ் வந்திருக்க வேண்டும்!

திருச்சி - 12, டபிள்யூ. ராஜா சிவகுமார்.

◆ பாமர மக்களின் - குறிப்பாக - பெண்களின் ''உணர்வுகளை'' வியாபாரப் பொருளாக்கிக் காசு பண்ணும் மனிதர்களுக்கு இரண்டு நான்கு பக்கங்கள், கலர் படங்கள், அட்டையில் 'பரிவட்டம்'. ஆனால் 'நாக்அவுட்'க்குப் படத்தின் நேரத்தைப் போன்றே அரை பக்கத்துக்கும் குறைவான விமர்சனம்! ஆனால் விமர்சனம் என்னவோ அருமை!

கோவை, ஆர்.வி. நடராஜன்.

## இவரல்லவோ புரட்சித் தலைவி!





# பார்க் டவுன்
# பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985
223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்: 582676; 564354

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 45 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | *5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 12,640/- | ரூ. 12,000/- | ரூ. 12,000/- | ரூ. 1,12,640/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |
| ரூ. 50,560/- | ரூ. 48,000/- | ரூ. 48,000/- | ரூ. 4,50,560/- |

## பொற்குவியல் திட்டம்

ரூ. 100/- மட்டுமே பிரதிமாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ. 3,00,000 பெறுவீர்

## பென்ஷனர் நலத் திட்டம்

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்

| | | |
|---|---|---|
| ரூ. 10,000/- மும் அதற்கு மேலும் | 12 மாதங்கள் | வட்டி 19 1/2% |
| ரூ. 10,000/- க்கு கீழ் | | வட்டி 18 1/2 % |

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ. 25/- ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ. 7500/- ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,25,000/- பெறலாம்
ரூ. 9000/- ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

| | | |
|---|---|---|
| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும். சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி விதம் ரூ. 1.85 |

கௌரவ ஆலோசகர் :
P. பாலசுப்ரமணியம், B.Sc.
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3

(Friday Weekly Holiday)

இயக்குனர் குழுத் தலைவர்:
R. விவேகானந்தன், B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours : Week days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

கபடி...
கபடி...
போன தடவை அழுகுணித் தனம் பண்ணி ஆட்டமே ரத்தாயிடுச்சு... இந்தத் தடவையாவது ஜாக்கிரதையா ஆடுங்க...
சேஷன்
பிரதமர்
1 கோடி லஞ்சம் புகார்
பங்கு மார்க்கெட் ஊழல்
அரசுத் துறை நிறுவனங்களின் பங்கு விற்பனையில் மோசடி
இல்லாட்ட போனாலும் ஒரு களைதானே? அறிவு, நம்ம பல்கலைக்-கழகத்த ரொம்பத் தேறிட்டாங்க!
ஆமாமாம்! அதுக்காக பல்கலைக்-கழகங்களுக்கே டாக்டர் பட்டம் குடுத்திடலாம்!




கல்கி





1993
ஜூலை 25
மலர் : 51
இதழ் : 52
ஸ்ரீமுக
ஆடி 9


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

# தோல்வி ஊர்வலங்கள்

## நடத்தத் தயாரா...?

ஹர்ஷத் மேத்தா விவகாரத்தினால் மத்திய அரசு மீது கருநிழல் படர்ந்திருக்கும் போது, மத்திய அமைச்சர் குமாரமங்கலம் தமிழக அரசின் மீது சுமத்தும் குற்றச்சாட்டுக்கள் ஒளி இழந்து காணப்படலாம். ஆனால் நில வொளி மங்கலாக இருக்கிறது என்பதால் காலடியில் ஊர்ந்து செல்லும் விஷப் பாம்பை நாம் அலட்சியம் செய்வது நமக்கேதான் ஆபத்தாக முடியும்.

கூச்சம், நாச்சம், தயக்கம் எதுவுமின்றி ரங்கராஜன் குமாரமங்கலம் தெளி வாகவே கூறி விட்டார், ''இது ஒரு கமிஷன் அரசு'' என்று. ''இங்கே லஞ்சம் ஒன்றுதான் வேலை செய்கிறது'' என்று அப்பட்டமாகச் சொல்லி விட்டார். அவர் கூறியதில் புதிய கருத்து ஒன்றுமில்லை. மக்கள் அன்றாடம் அனுப வித்து வருகிற விஷயம்தான். தோழமைக் கட்சியாக இருந்தவரை கூறத் தயங் கியதை இன்று அவர் பகிரங்கமாகப் பேசியிருக்கிறார். அவ்வளவே. கொஞ் சம் விளக்கி, புள்ளி விவரங்களையும் தந்திருப்பதுதான் விசேஷம் :

''ஆண்டொன்றுக்கு மத்திய அரசு தமிழக அரசுக்கு 3000 கோடி ரூபாய் அபிவிருத்தி திட்டப் பணிகளுக்காகக் கொடுக்கிறது. அதில் பாதி கூட உருப் படியாகச் செலவிடப்படுவதில்லை. சாலைகள், பள்ளிகள், குடியிருப்பு என்று ஏராளமான கோரிக்கை மனுக்கள் வருகின்றன. அவற்றைக் கவனிக்குமாறு மாநில அரசுக்கு அனுப்பினால் ஒன்றுமே நடப்பதில்லை. கிணற்றில் போட்ட கல்'' என்கிறார் குமாரமங்கலம்.

வைரம் மற்றும் நவரத்னக் கற்கள் பட்டை தீட்டும் தொழிலுக்காக ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. ஆனால் மாநில அரசு கேவலம் 8000 சதுர அடி நிலம் தராததால் ஏராளமான வேலை வாய்ப்புக்களை உருவாக்கக்கூடிய இந் தத் திட்டம் நிறைவேறாமலே நிற்கிறது.

இவ்வாறு மாநில அரசு பல இனங்களிலும் ஒத்துழைப்புத் தர மறுப்ப தால், 5.13 கோடி பெருமானமுள்ள திட்டங்களைச் சேலம் மாவட்டத்தில் மத்திய அரசு நேரடியாக நிறைவேற்ற வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

ஐ.ஆர்.டி.பி. திட்டத்தின் கீழ் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ள மக்களுக்கு உதவும் பணியிலும் ஊழலே முன்நிற்கிறது. ''வீடு வேணுமானால் ஐயாயிரம் கொடு'' என்று அதிகாரிகள் பகிரங்கமாகக் கேட்கிறார்கள்! குடும்ப அட்டைக்குக் கூட விலை பேசுகிறார்கள். இவ்வாறெல்லாம் குமாரமங்கலம் விளாசியிருக்கிறார். மக்களின் வரிப்பணம் - கோடிக்கணக்கான ரூபாய்கள் - ஏழை பாழைகளைச் சென்றடைவதற்குப் பதில், அதிகாரிகள், ஆளும் கட்சிக்காரர்களின் பாக்கெட்டுகளைக் கனக்கச் செய்து கொண்டிருக்கிறது.

இதற்கெல்லாம் யாராவது ஒரு மந்திரியை விட்டு முதல்வர் சாக்குப் போக்குக் கூறச் செய்யலாம். சாக்குப் போக்கு ஏதும் வசமாக அகப்படா விட்டால், குமாரமங்கலம் அடுத்த முறை தமிழகம் வரும் போது கறுப்புக் கொடி காட்டி கல்லெறி கைங்கர்யத்தையும் தூண்டி விடலாம். ஆனால் இதனா லெல்லாம் உண்மைகள் உறுதிப்படுமே தவிர, அவற்றைப் பூசி மெழுகி விட முடியாது.

அ.தி.மு.க. அரசின் ஆற்றலின்மை, மெத்தனப் போக்கு, லஞ்ச லாவண் யங்கள் பற்றி செய்திகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. இவற்றைத் தனி விமானப் பயணம், ஆயிரம் கார் பவனி, மலர் தூவி வரவேற்பு, கட்அவுட் கள், முழுப்பக்க விளம்பரங்கள், டாக்டர் பட்டங்கள் முதலியவற்றால் ஈடு கட்டி விட முடியாது. அவதிப்படும் மக்களுக்கு இவற்றைக் காண வெறுப்பு அதிகரிக்குமேயன்றி, குறையாது.

ஒரு உயர்நீதி மன்றத் தீர்ப்பை அரைகுறையாகப் படித்து விட்டு அதற்கு ஒரு வெற்றி ஊர்வலம் எனில், இதே உயர்நீதிமன்றம் இன்றைய தமிழக அரசின் பல செயல்பாடுகளுக்கு ஆட்சேபணை தெரிவித்தும், பல உத்தரவு களை ரத்து செய்தும் ஆணைகள் பிறப்பித்துள்ளதே, அதற்கெல்லாம் தோல்வி ஊர்வலங்களா நடத்துவது?

'தமிழக முதல்வர் ஷோ காட்டுவதை நிறுத்தி, ஆட்சி புரிய ஆரம்பிப்பது எப்போது?' என்று மக்கள் கேட்கிற நிலை தோன்றி விட்டது.

# மெட்ரோ சானலின் மறுபக்கம்

அகிலா கார்த்திகேயன்

இரவு மணி ஒன்பதரையைத் தாண்டி யிருந்தது. ஒரே பசி. என் மனைவி பார்வதி யும், மகன் ராம்ஜியும் டீ.வி.யில் 'சூப்பர் ஹிட் முக்காபுலா'வைப் பார்த்துக் கொண்டே கையிலிருந்த சூப்பர் ஹிட் (Heat) மக்காசோளாவைக் (பாப்கார்ன்) கொறித் துக் கொண்டிருந்தனர். ''முகாபுலா முடிஞ் சாத்தான் சாப்பாடு'' என்பது எனக்கு நன்றா கவே தெரியும்.

''ஹை... அம்மா... தடுக்கி...'' - ராம்ஜி கத்தினான்.

''டேய்... அம்மா எங்கேடா தடுக்கி? நான்தானேடா தடுக்கி இப்போ விழ இருந் தேன்'' கீழே இரைந்து கிடந்த பேப்பர், பத்திரிகைகளை அள்ளியபடி ராம்ஜியிடம் கோபமாகக் கேட்டேன்.

''அட அதை யாருப்பா கவனிச்சா... முகாபுலாவிலே இரண்டாம் இடத்திலே இருக்கு தில்லு தடுக்கி... மேரா தில்லு தடுக்கி.''

எனக்கு அவன் சொன்னது புரிய வில்லை.

''ஐயையோ... முதல் பாட்டு அப்போ 'குக்குக்கு குக்குதாரா''' - பக்கத்திலிருந்த பார்வதி கூவிய போது எனக்குப் பயம் கண்டது. அம்மாவுக்கும் மகனுக்கும் என்ன ஆகி விட்டது? என் கவலையை வெளிப் படுத்துவதற்குள் திரும்பவும் புதிர் போட் டாள் பார்வதி :

''டேய் ராம்ஜி அப்ப நம்ப எழுதின வரிசை கரெக்ட்...''

''ஒண்ணா ரெண்டா ஆயிரக்கணக்கா பர்ம்யூடேஷன், காம்பினேஷன் போட்டு கார்ட் எழுதிப் போட்டிருக்கோம்... அதுலே இது ஒரு காம்பினேஷன்'' ராம்ஜி சொன்ன போது எனக்கு எரிந்தது.

''ஏண்டா பணத்தைக் கொட்டி எம். எஸ்ஸி மேத்ஸ் படிக்க வைச்சா... இதுக் கெல்லாம் பர்ம்யூடேஷன் போட்டுண்டு இருக்கியாடா?'' என்றேன்.

''கொஞ்சம் சப்தம் போடாத இருங் கப்பா... இப்போ குலுக்கி எடுக்கப் போறாங்க.. அம்மா பேரு விழ சான்ஸ் இருக்கு'' - ராம்ஜி சொல்லிக் கொண்டிருக் கும்போதே பார்வதி தான் உட்கார்ந்திருந்த சேரிலிருந்து எழுந்து டீவிக்குப் பக்கத்தில் குதித்துக் கொண்டே ஓடினாள்.

காப்பிக் கொட்டை மிஷின் போன்ற ஒன்றில் பல சீட்டுக்களை உருட்டி ஒரு யுவதி லபக்கென்று ஒரு அட்டையைக் கவ்வி எடுக்க, பின்னணியில் ஒரு ஆண் குரல் இந்தியில் ஒலித்தது.

''பெஹலா இனாம் வாலா ஹை... மத ராஸ்லே பார்வதி'' என்றதோடு எங்கும் கும்மிருட்டாகி, டீ.வி. உயிர் இழந்தது. பவர்கட்!

''அம்மா... கங்கிராட்ஸ்... ஃபர்ஸ்ட் பிரைஸ் அடிச்சுட்டே... பாம்பேல பெரிய ஸ்டார் ஹோட்டல்லே மூணு நாளு ஸ்டே...'' ராம்ஜி காட்டுக் கத்தலாய்க் கத்தி யது பவர்கட் நிசப்தத்தில் பெரிசாகக் கேட் டது.

''ஏண்டா கத்தறே... நாலு வீட்டுக்குக் கேக்கறா மாதிரி'' என அடக்கினேன்.

''அடச்சே நீங்க என்ன மனுஷன்...! பொண்டாட்டிக்கு இத்தனை பெரிய பிரைஸ் அடிச்சிருக்கு... நாலு பேருக்குத் தெரிஞ்சா என்னவாம்?'' என்று அவள் சொல்லிக் கொண்டிருக்கும்போதே திரும்ப வும் பளிச்சென்று பவர் வந்தது.

''பார்வதி அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். சகுனமே சரியா இல்லே. 'பார் வதி'ன்னு அவன் ஆரம்பிக்கும் போதே பவர்கட்..... பாம்பே ஸ்டார் ஹோட்டல்னு வேற சொல்றான்... நீ அங்கே போறப்போ பாம் கீம் வெடிச்சா என்ன பண்ணுவே?'' என்றேன்.

''நல்லதே உங்க வாயிலே வராதே... என் தம்பி கந்தரை ஒரு நடை பம்பாய் வரைக்கும் என் னோட வந்துட்டுத் திரும்ப முடியுமான்னு கேட்டுப் பார்க்கிறேன்'' - பார்வதி சொன்னதும் பகீரென்றது.

''நீ ஒரு நடை வந்துட் டுப் போன்னு கூப்பிட்டா அவன் நடந்தேவா பம்பாய் வரைக்கும் வர முடியும்? ரயில் சார்ஜ் அவனேவா போட்டுப்பான்!''

''அவனுக்கு என்ன தலையெழுத்தா......? நாமதான் போட்டு, கூட்டிட்டுப் போகணும்... அவன் இந்தியிலே மத்தியமா பாஸ் பண்ணியிருக்கான் ஒத்தாசையா இருக்கும்'' என்றாள் பெருமையாக.

''என்னடி பெரிய மத்தியமா! நான் 'விஷாரத்' பாஸ் பண்ணியிருக் கேன்... அவனுக்குத் துட்டை அழுது கூட்டிட்டுப் போறதுக்குப் பதிலா நானே வந்துட்டுப் போறேன்!''

''சரி... நீங்களே வந்து தொலைங்க யார் வேண்டாம்னா...''

என்றாள்.

''அம்மா ஸ்டார் ஹோட்டல்ல நீ மட்டும்தான் தங்கலாம்... அப்பாவை விட மாட்டான்'' - ராம்ஜி தூபம் போட்டான்.

'பாவி! அந்த ஹோட்டலில் பாம் விழ!' உள்ளுக்குள் சபித்தேன்.

**டி.வி**யில் மெட்ரோ அவர் ஆரம்பித்ததிலிருந்து பார்வதியின் 'மெட்டரோ அவர்' அதிகரித்து விட்டது. என் வயசான தாயார் ''ஒரு இரண்டு வரி சௌக்யம்னு அப்பப்ப கடுதாக போடக் கூடாதா பாரு?'' என்பாள். அதற்கு ''உக்கும்! எனக்கு எங்க ஒழியறது'' என்று இடக்காக பதில் வரும். ஆனால் இப்போதெல்லாம் ஒரு நாளைக்குச் சராசரி ஐம்பது கார்ட் வாங்கி வரச் சொல்லி வரிந்து வரிந்து எழுத ஆரம்பித்திருக்கிறாள் பாரு.

''அப்படி என்ன எழுதற பாரு? ராம நாமம் எதையாவது எழுதி எந்த மடத்துக்காவது அனுப்பப் போறியா?'' என்றேன் முதன் முறையாக ஐம்பது கார்ட் கேட்டவளிடம்.

''ராம நாமமில்லே... சகஸ்ரநாமம்'' என்றாள்.

புரியாமல் விழித்தேன். காதைக் கொண்டு வரச் சொன்னாள்.

''அதான் நேத்தி டீ.வி.யிலே ஒரு போட்டோ காண்பிச்சு யார்னு கண்டுபிடிச்சி எழுதி அனுப்பினா நூறு ரூபாய் பரிசுக் கூப்பன்னு சொன்னாளே... அது சகஸ்ரநாமம்னு நான் கண்டுபிடிச்சுட்டேன்.''

''அதை ஏன் இத்தனை மெதுவா



காதோட சொல்றே?''

''பக்கத்தாத்து ரேவதி காதிலே விழுந்தா அவளும் எழுதிப் போட்டுடுவாளே!''

''அடி பைத்தியமே...! உன்னைப் போல ஒரு லட்சம் பைத்தியங்கள் எழுதுமே'' என்றேன்.

''அதுக்குத்தான் தினம் ஐம்பது கார்ட் எழுதினா - எத்தனை அதிகமா அனுப்ப முடியுமோ அத்தனை அனுப்பினா - சான்ஸ் உண்டுன்னு ராம்ஜி சொன்னான். உங்களுக்கென்ன? பிச்சை காசு - பதினைஞ்சு பைசா கார்டு!'' என் வாயை அடைத்தாள்.

இப்படி ஆரம்பித்த பித்து படிப்படியாக முன்னேறி, முடியை மறைத்துக் கொண்டிருக்கிற மூத்த நடிகை, இடியரசன் இயக்கிய முதல் படம் போன்ற இன்னபிற செகண்ட் சானல் கேள்விகளுக்குப் பதில் அனுப்ப இவளுடைய போஸ்ட் கார்ட் கொள்முதலும் நாளுக்கு நாள் அதிகரித்தது.

எங்கள் பேட்டை போஸ்ட் ஆபீஸில் என்னை ஏற இறங்கப் பார்த்தவர்கள், கடைசியில் என்னை போஸ்ட் ஆபீஸ் வாசலையே ஏற விட மறுக்கும் நிலை ஏற்பட்டது. நானும் ஆபீஸில் பர்மிஷன் போட்டு விட்டு இவள் போஸ்ட் கார்ட் தேவையைப் பூர்த்தி செய்ய ஜி.பி.ஓ., மவுண்ட்ரோட் என லோலோவென அலைய வேண்டியதாயிற்று.

பார்வதியோ பசி நோக்காமல், கண் துஞ்சாமல் தினமும் மெட்ரோ சானல் எல்லாம் கேள்விகளைக் கவனிப்பதும், பகலில்

போஸ்ட் கார்டு படுக்கையில் புரண்டு பதில் எழுதுவதுமாக இருந்ததில் என் பசியையும் நோக்காமல், கண் துஞ்சவும் விடாமல் சதாய்த்தாள்.

இந்த நிலையில், தமிழ் நடிகை இந்தி ஃபீல்டுக்குத் தாவுவது போல இவளும் தாவ, இவள் மொழிப் பிரச்னைக்கு ராம்ஜியும் உதவ, முகாபுலா பாடல்களை ஆயிரத்தெட்டு வகையில் காம்பினேஷன் செய்து அனுப்ப, இப்படி ஒரு பம்பாய் சான்ஸ் வரும் என்று ஒரு விதி!

அன்று இரவே பார்வதிக்கு பம்பாய் பித்து தலைக்கேறி விட்டது. அந்த பாதி ராத்திரி பத்து மணிக்கு மேல் அக்கம் பக்கத்து அபார்ட்மெண்டில் அத்தனை வீட்டிற்கும் போய் தனக்கு முகாபுலா பரிசு கிடைத்து விட்டதைப் பீற்றிக் கொண்டு திரும்பினாள். என்னையும் ராம்ஜியையும் தூங்க விடவில்லை.

என் பம்பாய் அத்தையைப் பற்றி முதல் முறையாகப் பரிவோடு விசாரித்தாள். அப்படியே பம்பாயிலிருந்து ஒரு எட்டு கோவாவுக்கும், ஒரு பதினாறு அகமதாபாத்துக்கும் போய் வர பட்ஜெட் போட்டாள். ஸ்டார் ஹோட்டலில் கட்டிக் கொள்ள ஜரிகை பார்டர் அகலமாய்ப் போட்ட இரண்டு பட்டுப் புடைவை கேட்டாள். மிதுன், ஜாக்கி ஷ்ராப் என்று இந்தி ஸ்டார்களைப் பற்றி ராம்ஜியிடம் கேட்டறிந்தாள்.

அடுத்த நாள் ஆபீஸ் கிளம்பும் போது முன்கூட்டியே என்னை லீவுக்குச் சொல்லி வைத்து விடும்படி கூறியனுப்பினாள். எனக்கே அவள் ஆடிய ஆட்டத்தில் அந்த பம்பாய் பரிசில் இலேசான பெருமையும் ஆவலும் கொப்பளித்திருந்தன.

ஆபீஸில் விஷயம் தெரிந்து விட்டால் டிரீட் என்று ஆளுக்கு ஆள் பிடுங்குவார்களே என்று ஆரியபவனில் நுழைந்து அரை கிலோ ஸ்வீட் வாங்கிக் கொண்டேன். ஆபீஸரிடம் சொல்லிப் பார்ப்பது, இல்லையென்றால் மெடிகல் லீவ் இருக்கவே இருக்கிறது என்று எண்ணிக் கொண்டேன்.

இன்னும் ஆபீஸர் வந்தபாடில்லை. வந்தவுடன் அவருக்கு முதலில் சேதி சொல்லி விட்டு மற்றவர்களுக்கு ஸ்வீட் கொடுக்கலாமென்று இருந்தேன். அப்போது ப்யூன் சொக்கலிங்கம் ஒரு பிளாஸ்டிக் டிரேயில் சாக்லெட்டுகளைக் கொட்டி ஒவ்வொரு சீட்டிற்கும் வந்து கொண்டிருந்தான். என்னிடம் வந்தவுடன்,

''என்ன சொக்கு என்ன விசேஷம்? பேரன் பேத்தி பொறந்திருக்கா?'' என்றேன்.

''ஹி... ஹி... என் சம்சாரத்துக்குப் பிரைஸ் வுழிந்து இது சார்... பம்பாயிலே போய் பெரிய ஓட்டல்ல தங்கறதுக்கு ஃபுல் செலவும் அவுங்களே தந்து இட்டுகினு போறாங்க சார்.'' சொக்கலிங்கம் சொன்ன போது என் கையிலிருந்த சாக்லேட் நடுங்கியது.

''நீ.. நீ என்னப்பா சொல்றே?'' பதறிய படி கேட்டேன்.

''ஆமாம் சார். டீவிலே இந்தி பாட்டெல்லாம் போட்டு வரிசையா எழுதச் சொல்றாங்களே... அதுக்கு இவளும் எம் பொண்ணுமா சேந்து இரண்டாயிரம் கார்டு போட்டுகிதுங்கோ - அது கரீட்டா பூடவே, 'லாட்'ல பிரைஸ் வுழிந்து கீது... நீ அந்த புரோக்கிராமெல்லாம் பார்க்கறதில்லே போல கீது...!''

''அப்போ... உன் பொண்ஜாதி பேரு?'' சொரத்தில்லாமல் கேட்டேன்.

''ஏன் சார் கேட்கறே... நம்பிக்கையில்லையா...? பார்வதி, லட்சுமிபுரம், மெட்ராஸ்னு இவ எழுதிப் போட்ட கார்டை டீ.வி.யிலேயே காட்னாங்களே... நீ பாக்கல போல தெரிது'' சொக்கலிங்கம் நகர்ந்தான்.

அடி பார்வதி! நீ மட்டும்தான் போஸ்ட் கார்டு கிறுக்கு என எண்ணியது எத்தனை தவறு!

'பவர்கட்' உபயத்தால் நேற்றிலிருந்து பைத்தியமாக அலையும் என் பார்வதியை நினைக்கப் பரிதாபமாக இருந்தது.

அப்போது எனக்கு போன் வந்திருப்பதாகச் சொன்னார்கள். போய்ப் பேசினேன். பார்வதிதான்!

''என்னா நேத்தி சந்தோஷத்திலே சொல்ல மறந்துட்டேனே... எட்டு மணி 'டிராமா நேரத்திலே' அரை டிராயர் போட்டுண்டு மொட்டை தலையோட ஆறு வயசுப் பையனை யார்னு கண்டுபிடிக்கச் சொன்னாளே அது 'சோ'வாத்தான் இருக்கும்... நூற்றியைம்பது கார்டு எப்படியும் போடணும்... மறக்காம வாங்கிண்டு வாங்கோ...'' என்றாள்.

ராதா வாசுதேவன்






# முதல் இன்னிங்ஸ்

அப்போது நாங்கள் பிறந்து முறையே $13\frac{1}{4}$, $13\frac{3}{4}$, 14 வருடங்கள் ஆகியிருந்தன. தாச்சாமி என்கிற ஆமை என்கிற ராமசாமி, டொக்கு என்கிற கோவிந்தன் மற்றும் கிருஷ்ணனாகிய நான் -

இந்த மூவரணி சைதாப்பேட்டை ராமானுஜம் பிள்ளைத் தெருவை ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருந்த நேரம். எதிர் வீட்டில் மாங்காய் அடித்தல், எல்லா வீட்டிலும் பந்தடித்து ஜன்னல் உடைத்தல், அவரவர் உள்நாட்டு விவகாரங்களை ஒற்றறிந்து குழாயடி நோட்டீஸ் போர்டில் எழுதி வைத்தல், இப்படியான அரை டிக்கெட் சமாசாரங்கள் அவ்வப்போது புரிந்து, சு. சுவாமி ரேஞ்சில் பரபரப்பு ஏற்படுத்தி வந்தாலும் மனத்தளவில் அப்போதே 'பெரியவர்களாக' உணர ஆரம்பித்திருந்தோம். அதைப் பறைசாற்றும் விதமாக டி.வி.யில் வால்ட் டிஸ்னி கார்ட்டூன்கள் பார்ப்பது, மர்ம வீரன் மாயாவி போன்ற காமிக்ஸ் பார்ப்பது ஆகியவற்றை அறவே தவிர்த்திருந்தோம். மாறாக ஒளியும் ஒலியும் கண் கிழியப் பார்ப்பது, மொட்டை மாடியில் அட்டை கிழித்த குமுதத்தில் விஜயமகாதேவி படிப்பது இப்படியாக எங்கள் எல்லைகளை விரிவுபடுத்திக் கொண்டிருந்தோம்.

ஆயினும் அவரவர் வீட்டுப் பெரியவர்கள் இதை உணர்ந்திருக்கவில்லை. கேவலம் ஒரு ஃபுல் பேண்ட் கேட்டதற்கு, கோடை காலக் கூட்டத்தொடர் கூட்டி, குரல்வாக்கெடுப்பு மூலம் அனுமதி மறுத்திருந்தார்கள். ஆகவே மாவு மிஷின் கடைகளில், மிளகாய் மிஷின் மூக்கருகே ஒரு மாதிரியான பழுப்பில் தொளதொளத்துத் தொங்குமே அந்த மாதிரியான அரை டிராயர்.

மேலும் பையன்களை ஆன்மிக நெறி தவறாது வளர்க்கும் பொருட்டு அவரவர் அம்மாமார், மாலை வேளை விளையாட்டுகளுக்குத் தடை உத்தரவு போட்டு விஷ்ணுசகஸ்ர நாமம், ஸ்ரீஸூக்தம் என்று சமஸ்கிருதத்தின் சகல கூறுகளையும் மண்டைக்குள் திணிக்கப் பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தார்கள். உபரியாக, நெற்றியில் GST ரோடு மாதிரி ஒற்றை ஸ்ரீசூர்ணம்.

ஆண்டுப் பரீட்சைகள் முடிந்து லீவ் விட்டார்கள். இன்னும் இரண்டு மாதங்களுக்குப் பாடபூதம் இல்லை. முன்னதாக எழுதியிருக்கிற பரீட்சைகள் பற்றிய துளியூண்டு கவலை அடிமனத்தை அரித்தாலும் இந்த இரண்டு மாதத்தில் சொர்க்கத்தின் வாசற்படியை மிதித்து வந்து விடுவது என்று முடிவு செய்து கொண்டோம்.

முதல் கட்டமாக ஆளுக்கு இரண்டு ரூபாய் போட்டு ஒரு பச்சை நிற டென்னிஸ் பால். தென்னை மட்டை 'பாட்' தயாராக இருக்கிறது.

டாஸ் போட்டு ஜெயித்த சந்தோஷத்தில் நான் பேட் பிடித்தேன். ஃபீல்டர் யாரும் இல்லாத ஸ்லிப், ஸ்கொயர்லெக், லாங் ஆன் (இதற்கு மேல் தெரியாது) திசைகளில் ஒரு நோட்டம் விட்டேன்.

போலிங் எண்டில் தாச்சாமி. அந் நாளில் பாகிஸ்தான் அணி இந்தியா வந்திருந்தது. தாச்சாமியை உற்று நோக்கினால், அவன் மனத்தில் தன்னை சிக்கந்தர் பக்த் ஆக எண்ணிக் கொண்டிருப்பது புரியும். அடிக்கடி பந்தை நாக்கில் தோய்த்து சட்டையில் தேய்த்து நொள்ளை பண்ணிக் கொண்டிருந்தான்.

தனது அபாரமான முதல் பந்தை வீச தாச்சாமி சுமார் இருநூறு மீட்டர் தொலைவிலிருந்து ஓடி வர, ஸ்டம்ப்புக்குப் பின்னாலிருந்து டொக்கு கோவிந்தன் ரங்காச்சாரி குரலில் கமெண்ட்ரி சொல்லிக் கொண்டிருந்தான். நான் அந்தப் பந்தை எப்படி அடித்தேன் என்று இன்று வரை புரியவில்லை. எங்கள் பக்கத்து வீட்டை நோக்கி அது பாய,

சட்டென்று கதவு திறந்து எதிர்ப்பட்ட அந்தப் பெண்ணின் நெற்றியில் மோதி -

கடவுளே! நேற்று வரை பூட்டியிருந்த வீட்டில் இன்று யார் புதிதாக முளைத்திருக்கிறார்கள்? அக்கால முனிவர்களின் யாகத்திற்குத் தடையாக அசுரர்கள் அவ்வப்போது முளைத்தது மாதிரி, நாங்கள் கிரிக்கெட் ஆட ஆரம்பித்தால், யாராவது ராட்சதர் மாதிரி முன்தோன்றி விடுகிறார்கள்.

பா. ராகவன்

விபரீதமாக ஏதும் நேர்

வதற்கு முன்பாக நாங்கள் காற்றில் கடிதென விரைந்து அவரவர் வீடுகளில் ஐக்கியமானோம்.

''என்னடா, இப்பத்தானே விளையாடப் போன? அதுக்குள்ள வந்துட்டே?''

சந்தர்ப்பம் தெரியாத அம்மா.

''ஹிஹி. பந்து பக்கத்தாத்துல விழுந்துடுத்து.''

''போய்க் கேக்க வேண்டியதுதானே?''

''யாரோ புதுசா வந்திருக்கா போலருக்கு.''

''அதனாலென்ன? அந்தப் பொண்ணு ஆர்த்தி ரொம்ப சமத்து. நான் வாங்கித் தர்றேன் வா!''

செத்தேன். பலியாடு மாதிரி அம்மா இழுத்துப் போக, நான் ட்ராயர் நனையாத குறையாகச் சென்றேன்.

மண்டை வீங்கின மங்கை என்னைப் பார்த்ததும் சட்டென்று உள்ளே போய் விட்டாள். நான் அப்போதுதான் அவளை உற்று நோக்கினேன். ரெட்டைப் பின்னலும், குட்டைப் பாவாடையும், வட்ட முகத்தில் ஒட்டுப் பொட்டும்...

நடைபெறவிருந்த அண்டை தேசத்துப் போரை, அம்மா என்னும் ஆயுதம் கொண்டு தடுத்ததோடு மட்டுமின்றி, ஆறு ரூபாய் மதிப்புள்ள டென்னிஸ் பாலையும் திரும்பப் பெற்று வந்ததற்காக தாச்சாமியும், டொக்கு கோவிந்தனும் எனக்கு ஒரு புளிப்பு மிட்டாய் பரிசளித்து தம் நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்கள். மேலும் அவர்கள், எதிரி முகாமில் எனது அனுபவங்கள் பற்றிக் கேட்க ஆரம்பித்த போது நான் பெரிதும் உணர்ச்சிவசப்பட்டு, பின்வருமாறு பேசலானேன் :

''டொக்கு! நாம நினைக்கிற மாதிரி அவங்க நம்ம விரோதி இல்லைடா! அந்தப் பொண்ணு ஆர்த்தி பயங்கர நல்லவடா. நான் ஸாரி சொன்ன போது பரவால்லைன்னுட்டா தெரியுமா? அவங்கம்மா லெமன் ஜூஸ் குடுத்தாங்களே!''

''பெரியாள்டா நீ!''

**தொ**டர்ந்து வந்த நாட்களில் பல சந்தர்ப்பங்களில் நாங்கள் ஆர்த்தியை எதிர் கொள்ள வேண்டியிருந்தும் ஒரு வார்த்தை பேசவில்லை. அவளைப் பார்க்கும்போதெல்லாம் உள்ளுக்குள் ஒரு ரசாயனக் கொதிப்பு நேருவதை மூவரும் தனித்தனியே உணர்ந்தோம். அவ்வப்போது நடைபெறும் எங்கள் வா[illegible] மேஜை மாநாட்டில் அவளது









- எம். அசோகராஜா

பெயர் ஸ்ரீராமஜெயத்துக்கு நிகராக உபயோ கப்படுத்தப்பட்டது. மனத்திற்குள் அவ ளோடு பேசிப் பார்த்ததை உண்மையாகவே நடந்தது மாதிரி கண் விரியச் சொல்லிக் கொண்டோம்.

அன்று அப்படித்தான். வாசல் காம்ப் பௌண்ட் வால் மீது எங்கள் வழக்கமான வட்டமேஜை கூடியிருந்த சமயம்.

சட்டென்று ஒரு நட்சத்திரம் உடைந்தது மாதிரி அவள் கதவு திறந்து வெளிப்பட் டாள்.

எங்கள் பேச்சு நின்றது. இன்னதென்று சொல்ல முடியாத ஒரு இன்பமான பயம் வயிற்றில் சுற்றிச் சுழன்றது.

''டேய், வரியா; ஐ ஸ்பை விளை யாடலாம்?''

கேட்பது ஆர்த்தி. ரோஸ் ரிப்பன் சிரிக் கும் ரெட்டைப் பின்னல். அதே குட்டைப் பாவாடை, ஸ்டிக்கர் பொட்டு. மின்னல் சிரிப்பு.

''ஓ. விளையாடலாமே!''

மனத்திற்குள் சொல்லிக் கொண்டு தொப் தொப் என்று சுவரிலிருந்து குதித் தோம். தலையை அவசர அவசரமாகச் சரி செய்து கொண்டோம்.

ஒரு சிறிய அழைப்பின் மூலம் ஆர்த்தி எங்களை எவரெஸ்ட் அளவுக்குக் கௌரவப் படுத்தியிருக்கிறாள்.

''சாபூத்ரி போடலாமா?''

கால்கள் தரையில் பாவாமல் அவள் கரம் கோத்த போது டொக்கு கோவிந்தன் கண்கள் லேசாக நனைந்திருந்ததைக் கவனித் தேன். ராமசாமி கையைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டான். நான் சுலோகம் சொல்ல ஆரம் பித்தேன்.

அன்றைய ஐ ஸ்பை அடுத்த ஜன்மம் வரைக்கும் மறக்காது. நான் ஒளிந்திருந்த டாக்டர் மாமா வீட்டுக் கார் ஷெட்டில், தனக்கு வெகு அருகில் ஆர்த்தியும் ஓடி வந்து ஒளிந்து கொண்டதையும், அவள் சுவாசக் காற்றில் மகிழம்பூ வாசனை இருந்ததையும்

தாச்சாமி சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல் லாம் சொல்லாமலிருக்க மாட்டான்.

ராமசாமி மீதான எனது விரோதம் அந்த க்ஷணத்தில் ஆரம்பித்தது. டொக்கு கோவிந்த னும் இது விஷயத்தில் என்னோடு சேர்ந்து கொண்டான். இருந்தாலும் நெடுநாள் நல்லு றவைக் கெடுத்துக் கொள்ள வேண்டாம் என் கிற விவேக சிந்தனையில், பொறுமை காத் தோம்.

ரிஸல்ட் எதிர்நோக்கியோ, என்னமோ திடீரென்று ஆர்த்தி சில நாட்களாக, ஆஞ்ச நேயர் கோவிலுக்குப் போக ஆரம்பித்திருந் தாள். முன்னதாக இந் நடவடிக்கை குறித்து அறிக்கை ஏதும் அவள் எங்களிடம் அளித் திருக்கவில்லை. எனினும் நாங்களும் உடன் செல்வது என்று தீர்மானித்தோம்.

பக்தி சமாசாரம் என்பதால் அம்மாவின் அனுமதி, ஆசியுடன் சேர்ந்தே கிடைத்தது. ஐந்தரைக்கு அவள் கிளம்புவதை கவனித் திருந்தோம். ஆகவே எங்களது புறப்பாட் டிற்கான முன்னேற்பாடு நாலரையிலிருந்து தொடங்கி விடும்.

முதலில் முகம் கழுவுதல். மூன்று நாளைக்கு ஒரு லைஃபாய் வீதம் காலி யாவது குறித்து அப்பா சி.பி.ஐயை நாட லாமா என்று யோசித்துக் கொண்டிருந்தார்.

குட்டையில் எருமை முதுகு தேய்ப்பது மாதிரி முகம் தேய்த்துக் கழுவி, தைலாபி ஷேகம் செய்து, அம்மா இடும் ஸ்ரீசூர் ணத்தை அரை மனத்தோடு ஏற்றுக் கொண்டு, தவிப்புடன் தெரு இறங்குகை யில் வியர்வைப் பெருக்கில் முகத்தில் பௌடரின் மாடர்ன் ஆர்ட். சட்டையை இழுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு அனுமார் கோவிலுக்கு ஓடினால், ஆர்த்தி அங்கே பிராகாரம் சுற்றுவதில் மும்முரமாக இருப்பாள். கோவிலுக்குப் பின்னால் ஒரு மணல் திடல். ஜில்ஜில் என்று காற்று. எங்கள் தவிப்பு, மண்ணை அளைவதில் தெரியும். அம்மா, அடுத்த வீட்டு பத்தி

என்கிற பத்மா, மேலும் இரு மாமிகள் சகிதம் வருகிற ஆர்த்தி அந்தச் சமயங்களில் எங்களைக் கண்டுகொள்வதில்லை. சின்னதாக ஒரு புன்னகை கூட இல்லை. பாறைகளால் ஆன மலையை மனதில் சுமந்தபடிக்கு இருட்டில் வீடு திரும்புவோம்.

நாட்களின் கால்களில் சக்கரம் கட்டியது யார்? இரண்டு மாத லீவ் முடிந்து ஸ்கூலுக்குப் போகத் தொடங்கி விட்டோம். சற்றே பெரிய கிளாஸ். அல்ஜிப்ரா என்றொரு அரக்கன். ஏ ஸ்கொயர்டு பிளஸ் டூ ஏபி என்று கடாய் தலை வாத்தியார் கண்ணை உருட்டுகிறார். போர்டில் என்னென்னவோ கிறுக்குகிறார். கடவுளே ஏன் இப்படி சோதிக்கிறாய்? போர்டு எழுத்துக்கள் முழுக்க ஆர்த்தியின் முகமாய் வந்து இம்சிக்கின்றன.

அவள் இப்போது என்ன பண்ணிக் கொண்டிருப்பாள்? அதே ரெட்டைப் பின்னலும் குட்டைப் பாவாடையுமாய் மனவெளியில் ஒருமுறை மலர்ந்து விட்டுப் போனாள். ஒருநாளேனும் அவளைப் பார்க்க முடியாமல் போனால் இரவுகளில் துக்கம் துக்கமாய் நெஞ்சை அடைக்கும். கண்ணீரால் நனைந்த தலையணையை அம்மா பார்த்து விடுகிறபோது 'இப்பொவெல்லாம் ராத்திரில வாய்லேர்ந்து எச்சல் ஒழுகறதும்மா' என்று சமாளிக்க வேண்டியிருந்தது.

அன்று சனிக்கிழமை. மறுநாள் விடுமுறை என்கிற நினைவு, ஐம்புலன்களிலும் தேன்பாய்ச்சியது. பள்ளி விட்டதும் வேக வேகமாக ஓடி வந்தோம். வீட்டுக்குள் நுழைந்து காப்பியை வயிற்றில் இறக்கி, வாசலுக்கு ஓடி வந்த போது, எப்போதும் வாசல் திண்ணையில் பூத்திருக்கும் ஆர்த்தியைக் காணவில்லை. தவிரவும் சில புதிய தலைகள் அவள் வீட்டுக்குள் தெரிந்தன.

அவசர மேக்அப்பில் வெளியே வந்த அம்மா, ''சித்த ஆத்தைப் பார்த்துக்கோ. தோ வந்துடறேன்'' என்று ஆர்த்தி வீட்டுக்குள் போனாள். கடவுளே! நான் ஏன் பெண்ணாகப் பிறக்காது போனேன்?

அரை மணி கழித்து வெற்றிலைப் பாக்குடன் வந்த அம்மாவிடம் ''என்னம்மா?'' என்றேன்.

''உனக்கு ஒண்ணுமில்லைடா.''

''அவாத்துல யாருக்காவது கல்யாணமா?''

''ஒண்ணுமில்லைடா. அந்தப் பொண்ணு பெரியவளாயிட்டா.''

''அப்படீன்னா?''

''சீ, போடா.''

வாசலில் நின்று ஆர்த்தி தென்படுகிறாளா என்று பார்த்தேன். முன்னதாக இத்தகவலை தாச்சாமியிடமும், டொக்கு கோவிந்தனிடமும் சொல்லி விட்டேனாகையால் ஒருவித டைப்ரைட்டிங் பதை பதைப்பில் மூவரும் பலமான குழப்பத்தில் கையைப் பிசைந்து கொண்டு நின்றோம். அன்று முழுக்க அவளைப் பார்க்கவே முடியவில்லை.

மறுநாளும்.

மறுநாளும்.

மறுநாளும்.

ஒரு வாரம் கழித்துக் கூடின எங்கள் சபையில் தாச்சாமி கேட்டான், ''ஆர்த்தி இனிமே வெளில வர மாட்டாளாடா?'' அவிச்சையாக அவன் பார்வை அவள் வீட்டு ஜன்னல் பக்கம் போனதைப் பார்த்தேன்.

பெயரிட முடியாத ஒருவித சோக உணர்வில் நாங்கள் லயித்திருந்தோம்.

''பெரியவளாறதுன்னா என்னடா?''

''நான் எங்கம்மாகிட்டே கேட்டேன், காக்கா வந்து தலைல கல்லு போடுமாம்.''

''சீ, வேறென்னவோ.''

அன்று அது நடந்தது. அவள் வீட்டுக் கதவு திறந்து, அவள் வெளிப்பட்டாள். கடவுளே, எங்களைப் பார்த்ததும் ஏனிப்படி தலைகுனிந்து கொள்கிறாள்?

குட்டைப் பாவாடை இல்லை, ரெட்டைப் பின்னல் இல்லை. நடையில் அந்தத் துள்ளல் இல்லை. கத்தரிப்பூ நிற தாவணியும், பாதம் மூடின பாவாடையும், ரவிக்கையும், ஒற்றைப் பின்னலில் ஒரு முழம் பூவும்.

அம்மா, பத்தி என்கிற பத்மா மற்றும் இரு மாமிகள் சகிதம் அவள் அனுமார் கோவிலுக்குத் தான் போய்க் கொண்டிருந்தாள்.

நாங்கள் தற்செயலாகக் குனிந்து எங்கள் தொளதொளத்த அரை டிராயரைப் பார்த்துக் கொண்டோம்.

அதுவரை இருந்த இனம்புரியாத தவிப்பு அடங்கி விட்டாற்போலிருந்தது.

அவர் : எடைக்கு எடை வழங்கற விழாவோ இனிமே நம்ம கட்சியில வேணாம்னு தலைவர் சொல்லிட்டாரு!

இவர் : ஏன்?

அவர் : உடலைக் குறைச்சாகணும்னு டாக்டர் கண்டிக்க சொல்லிட்டாராம்!

- அம்பை தேவா



# ஆத்மா

'ஆத்தா மாரியாத்தா' வேப்பிலைப் பாடல் இல்லாமல், ஸீரியல் பல்ப் போல் தீ மிதிக்க வைக்காமல் ஒரு பக்திப் படம் பண்ணிப் பார்க்க பிரதாப்புக்கு ஆசை.

இன்ன இடத்தில், இன்ன தேதியில் கடவுள் பிரசன்னமாவார் என்று ஒரு சித்தர் குறிப்பு சொல்கிறது. அதை நம்பி மந்தைமடை மக்கள் வெள்ளம், ஒரு தீவிரவாதக் கும்பல், ஒரு பாடகன், காணாமல் போன அப்பாவைத் தேடி வரும் ஒரு ஆர்க்கியாலஜிஸ்ட், போலீஸ்... ஏகப்பட்ட கேரக்டர்கள். இருந்தாலும் உதறல் இல்லாத் திரைக்கதை.



27 KODAK EPX 5025 28

இந்தப் படம் 'வேறு இனம்' என்று முதல் ஷாட்டிலேயே காட்டி விடுகிறார்.

கடைசி வரையில் அதை இறுக்கிப் பிடித்து நிறுத்தக் கைகொடுத்திருப்பது ரொம்ப வருஷங்களுக்கு முன் வந்த சுஜாதாவின் 'தேவன் வருகை' - சிறுகதை.

படம் பார்க்க வருகிறவர்கள் ஆழ்ந்த நம்பிக்கை வைக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிற ஸீன்கள். 105 வயது சித்தர், மறுபிறவி, பூஜை மந்திரம் - இப்படியான ஜிகினா ஜாலங்கள். இப்படி ஒரு லொக்கேஷனை எங்கிருந்து பிடித்தார்களோ

தெரியவில்லை, அருவியும், மலையும், காடும், குகையும், போதாத குறைக்கு ஃபாரினில் வைத்த கோரா - கண்ணில் ஜவ்வி!

படத்தின் மிகப் பெரிய குறை, வசனம்.

தேவையே இல்லாத இடங்களி லெல்லாம் நீளநீளமாக. மிகப் பெரிய பலம் இளையராஜா. உழைப்பு, ஒவ் வொரு செ.மீ.யிலும் தெரிகிறது.

'என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும்; எதிர்க் கேள்வி கேட்க மாட்டேன்' என்று வாக்கு மூலம் தந்து விட்டு தியேட்டருக் குள் செல்லுங்கள்.

நட்சத்திர ஹோட்டல் விருந்து!

# பேண்டு மாஸ்டர்

சரத்குமார் பேண்ட் மாஸ்டர். ஹீரா மந்திரி மகள். கதை புரிந்திருக்கும்.



திரைக்கதைக்கு ஹோல்ஸேல் உபயம் தில்லானா மோகனாம்பாள் + கரகாட்டக்காரன்.

பேண்டுக்கார மேக்அப், சரத்குமாருக்கு ஃபைவ் ஸ்டார் ஓட்டல் பட்லர் செட் அப் தருகிறது. ஸோ, என்னதான் அவர் உணர்ச்சிமயமாக நடித்தாலும், தூள் பறக்க சண்டை போட்டாலும் என்னமோ காமெடி ஷோ பார்ப்பது மாதிரி! அதுவும் அந்தப் பிறந்த நாள் விழாவில் அவர் கேலன் கேலனாகக் கண்ணீர் உகுத்துக் கொண்டு பாடுகிற போது அடிவயிற்றிலிருந்து சிரிப்பு பிய்த்துக் கொண்டு பறக்கிறது!

ஹீரா நடிப்பில் ஜீரோ வாட் வெளிச்சம். கண்ணீர் விடுவதில் கமலா காமேஷை மிஞ்சி விடும் காரிகை. துள்ளல், எள்ளல், கொஞ்சல், மிஞ்சல் எல்லாம் இன்னும் கொஞ்ச நாளில் வந்து விடக் கூடிய சாத்தியக்கூறுகள்.

மாறாக, திரை முழுக்க ஆக்கிரமிக்கும் கே.எஸ். ரவிகுமார். எம்.ஆர். ராதா உயிர்பெற்று வந்தாற்போல அத்தனை அனாயாசம்! இவர் நடிப்பில் காட்டியிருக்கிற திறமையில் சற்று டைரக்ஷனிலும் காட்டியிருக்கலாம். ஒரு டுபாக்கூர் சமாசாரத்தை வைத்துக் கொண்டு ஒவ்வொரு சீனையும் எப்படி ஓட்டுவதென்று அவர் மண்டையைப் பிய்த்துக் கொண்டிருப்பது படம் நெடுகத் தெரிகிறது.

தேவா ம்யூஸிக். பாடல்கள் தியேட்டரில் சுகமாக இருந்தாலும், வெளியே வந்ததும் மறந்து விடுகின்றன.

பேண்டு மாஸ்டர் போல நாலு படங்கள் வந்தால் ஐந்தாவது போண்டி மாஸ்டர்!

- ஆர்.பி.ஆர்.

# 28. வாசி வாரியன்

சூழ்நிலை, சூழ்நிலை இரண்டையும் அறவே மறந்து மாறவர்மன் சிலையாக அமர்ந்து விட்டான் என்றால் அதற்குச் சரியான காரணம் இருக்கிறது என்பதைச் சற்றே திரும்பிய பராக்கிரமபாகு அறிந்து கொண்டான்.

பளபளக்கும் நிறத்தில் சீனத்துப் பட்டை அணிந்திருந்த அஞ்சனாதேவியின் வட்ட முகத்தின் நெற்றிப் பகுதியில் அலை அலையாக நெளிந்து சுருண்டிருந்த கூந்தலின் கற்றைகள், பிரமித்துப் பார்த்துக் கொண்டிருந்த மாறவர்மனை ஏளனம் செய்வது போல் அசைந்தன. சற்று சிறிதாக இருந்தாலும் ஒளிர்ந்து மின்னிய அவள் கரு விழிகள், இரண்டு கரு வண்டுகளைப் போல் அவன் மீது நிலைத்திருந்தன. அவற்றில் தெரிந்தது அலட்சியமா, ஏளனமா, பாராட்டா என்பது மட்டும் அவனுக்குப் புரியவில்லை. சுத்தமான தந்தத்தில் கடையப்பட்டது போன்ற கைகளின் வழவழப்பினூடே இறுகப் பிடித்திருந்த வங்கி அவன் மனத்தையும் சேர்த்துக் கவ்வியது. சங்கைப் பழித்த கழுத்தில் பாண்டிய நாட்டின் பெருமுத்துக்களைக் கோத்த மாலை ஒன்று புரண்டு மாறவர்மனைப் பாடாய்ப்படுத்தியது. இடையிலிருந்த நாகாபரணம் முகப்பிலிருந்த சிவப்புக் கண்களால் அவனை விழித்துப் பார்த்தது.

பராக்கிரமபாகுவின் வாக்குறுதியால் சற்று நிதானப்பட்டு விட்ட மாறவர்மன், அவளைக் கண்களால் விழுங்கி விடுவதைப் போலப் பார்த்தான். இவள் நிச்சயம் இந்த லோகத்துப் பெண்ணாக இருக்க முடியாதென்று தீர்மானித்தவன், அவள் நின்றிருந்த இடத்தை விட்டு அவனை நோக்கி நடக்கத் தொடங்கவே அவள் இடையிலிருந்த நாகாபரணம் அப்படியும் இப்படியுமாக நெளிந்து அசைவதைக் கண்டு, 'இத்தகைய அழகியை அடைய பாண்டிய நாடு என்ன, கைவசமிருந்தால் சோழ சேர நாடுகளையும் கூடச் சேர்த்து அளித்து விடலாமே!' என்று நினைத்தான்.

அவள் நடந்து வந்து அவன் முன் அமர்ந்த போது தன்னைப் பெண் கேட்க வந்தவனின் முன் காணப்பட வேண்டிய நாணமோ அச்சமோ இன்றி அவள் பார்வையில் ஓர் அலட்சியமே இருந்ததைக் கவனித்தான் மாறவர்மன்.

அவள் உள்ளே வந்த போது மாறவர்மன் திருமணத்தைப் பற்றிப் பேச

விஷ்வக்சேனன்





ஆரம்பித்திருந்ததை அவள் கவனித்திருக்க வேண்டும்.

''யாருக்குத் திருமணம்?'' புரியாதது போல் கிள்ளைக் குரலில் வெளிவந்த அவள் கேள்வி மாறவர்மனைக் குழப்பியது.

மாறவர்மனது குழப்பம் நிறைந்த பார்வையில் தொக்கி நின்ற கேள்வியைப் புரிந்து கொண்ட பராக்கிரமபாகு, ''அஞ்சனா, உனக்கும் இந்தப் பாண்டிய நாட்டுப் பிரபுவுக்கும்தான். நாம் ஏற்கெனவே பேசியது தானே?'' என்றான்.

''எனக்கு இப்போது திருமணத்தில் விருப்பமில்லை அண்ணா'' என்றவள், ''முதலில் இவர் தமக்கென்று ஓர் அரசை ஸ்திரமாக அமைத்துக் கொள்ளட்டும்'' என்றாள்.

இந்தப் பதிலும் அவள் அலட்சியப் பார்வையும் மாறவர்மனது ரோஷத்தைத் தூண்டவே ''அமைக்கிறேனா இல்லையா பாருங்கள்'' என்றான் உஷ்ணமாக.

பேச்சை வளர விட்டால் முன்கோபியான மாறவர்மனும் துடுக்காகப் பேசும் அஞ்சனாவும் புதிய சங்கடம் ஏதாவதொன்றை ஏற்படுத்தக்கூடும் என்று உணர்ந்த பராக்கிரமபாகு, ''மாறவர்மரே,



வாருங்கள் சற்று வெளியே சென்று பேசலாம்'' என்று எழுந்தான்.

அவளது அலட்சியப் பார்வையைச் சந்திக்கத் திராணி யற்ற மாறவர்மன் உடன் எழுந்து நடந்தான்.

அவன் வாயிலைக் கடக்கும் போது திராணியின்றித் தடுமாறி நடந்ததைக் கண்டு அஞ்சனா உள்ளேயிருந்து எழுப்பிய சிரிப்பொலி மாறவர்மன் இதயத்தில் அடுத்தடுத்து குத்தூசிகளாகப் பதிந்தது.

அவர்கள் வாயிலை அடைந்த போது தூரத்தில் மார்த்தாண்டனும் சோமசுந்தரனும் வேகமாக வருவது தெரிந்தது.

புரவி விட்டு இறங்கிய மார்த்தாண்டனின் பார்வை மாறவர்மனை எரித்து விடுவது போலிருந்தது.

அவர்களைப் பேச விடாமல் முந்திக் கொண்ட பராக்கிரமபாகு, ''வர வேண்டும் மார்த்தாண்டரே, இளவரசரிடம் அனைத்தையும் விவரமாகக் கூறியிருக்கிறேன். அரசரிடம் கலந்து கொண்டு பிறகு உங்களுக்குத் தெரிவிக்கிறேன். நீங்கள் போருக்கான ஏற்பாடுகளைச் சென்று கவனிக்கலாம்'' என்றான்.

அவன் தங்களுக்குக் கௌரவமாக விடைகொடுப்பதை உணர்ந்து கொண்ட மார்த்தாண்டன் அவனிடம் அப்போதே விடைபெற்றுக் கொண்டான்.

அன்று உச்சிப் பொழுதில் பாண்டி நாட்டுக்கலம் ஈழத்தை விட்டுக் கிளம்பியது.

# பாண்டியன் மகள்

அதே நேரத்தில் ஈழத்து அரண்மனையில் ஓர் உரையாடல் நடந்து கொண்டிருந்தது.

அரசரும் அமைச்சரும் அமர்ந்து கொண்டிருக்க, எதிரில் பராக்கிரமபாகு தான் மாறவர்மனுக்கு அளித்த உறுதிமொழியைப் பற்றிக் கூறிக் கொண்டிருந்தான்.

அனைத்தையும் பொறுமையாகக் கேட்ட அரசரின் பதில் அலட்சியமாக வந்தது : ''பராக்கிரமா, எனக்கு மாறவர்மன் மீது நம்பிக்கை பிறக்கவில்லை. அவனை விட்டால் பாண்டிய அரியணைக்கு நமக்குச் சாதகமானவர் எவருமில்லையா?''

அவர்களின் பேச்சைப் பொறுமையாகக் கவனித்துக் கொண்டிருந்த அமைச்சர் பதிலளித்தார் : ''ஏன் இல்லை? மாறவர்மனை விடச் சிறந்த வீரன் ஒருவன் பாண்டி நாட்டிலிருக்கிறான்.''

''யார் அவன்?'' மூன்று குரல்கள் ஒலித்தன அங்கு.

''கொங்குப் பாண்டியரின் மகன் குலசேகரப் பாண்டியன். ஆனால் அவன் மாறவர்மனுக்கெதிராகச் செயல்படத் துணிவானா என்பதுதான் கேள்வி'' என்றார் அமைச்சர்.

''அதை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்ற பராக்கிரமபாகு அன்றே தன் பயணத்திற்குத் தயார் செய்தான்.

அடைமழையைப் பொழிந்த மேகங்கள் காணாமற்போயிருக்க, வானம் திர்

மலமாயிருந்தது. தாமிரபரணியிலிருந்து பிரிந்து பாண்டிய நாட்டினூடே பாய்ந்த அந்தச் சிற்றாறின் இரு கரைகளையும் தொட்டு நுரைத்தும் சுழித்தும் புதுவெள்ளம் பாய்ந்து கொண்டிருந்தது. வெள்ளத்தில் தெரிந்த சுழல்களின் வேகம் அதிகமா அல்லது அவற்றை உற்றுப் பார்த்தபடி அமர்ந்திருந்த அந்த வாலிபனின் முகத்தில் தெரிந்த சிந்தனைச் சுழல்களின் வேகம் அதிகமா என்பதை நிர்ணயிக்க இயல வில்லை. நீறுபூசிய அவன் அகன்ற நுதலை அடுத்து குறுவாட்களின் முனைகளைப் போல் சரேலென்று இறங்கிய கருத்த புருவங்களும், கூர்மையாகப் பளிச்சிட்ட விழிகளும், கருமை படரத் தொடங்கியிருந்த உதட்டின் மேற்பகுதியும் அவனுக்கு இருபது வயதுக்கு மேல் மதிக்க இயலாதெனத் தெரிவித்தன. உரமான அவன் சரீரமும் இயற்கையாக ஒரு கம்பீரத்தைப் பெற்றிருந்த முகமும் அவன் அரச வம்சத்தைச் சேர்ந்தவன் என்று அறிவித்தன. அவன் இடையில் நீண்ட வாளின் பிடியிலிருந்த மீன் இலச்சினை, விலைமதிப்பற்ற கற்கள் பதிக்கப் பெற்று அவன் பழைமையான கொங்குப் பாண்டிய வம்சத்தில் வந்தவன் என்று அறிவித்துக் கொண்டிருந்தது.

கிளார்க் : சார்... ரெண்டு நாளா தூக்கமே வரலை...

மானேஜர் : வேலை செய்யாமல் சும்மா உட்கார்ந்திருந்தா எப்படித் தூக்கம் வரும்? ஆபீசைச் சுற்றி மூணு ரவுண்ட் ஓடுங்க...!

– வி. டி. குமார்



சற்றுத் தள்ளி நின்றிருந்த அவனது புரவியின் பக்கவாட்டில் தொங்கிய பெரும் போர்வில் அவனுக்கு வாட்பயிற்சியை விட விற்பயிற்சியில் அதிக நாட்டமிருப்பதை உணர்த்தியது.

அவன் அறிவு, விஜயாலய சோழர் காலத்திலிருந்தே தனது வம்சத்துக்கும் சோழருக்கும் நிலவிய நட்பும் பிணைப்பும் தனது தந்தை ஜெகவீர பாண்டியர், மார்த்தாண்டனுடன் சேர்ந்ததால், அழியும் நிலைக்கு வந்து விட்டதை எண்ணிப் பார்த்தது. இருந்த கொங்கு நாடும் மழநாடும் பறிபோய், தற்போது அந்தச் சிற்றாறுக்கும் செம்பொன்மாரிக்கும் இடைப்பட்ட நிலத்தில் சிற்றரசு அமைத்துக் கொண்டு ஒதுங்கியிருப்பதை நினைத்து வருந்தியது. தற்போது சோழருக்கு எதிராக உயர்த்தியிருக்கும் போர்க் கொடியால் ஏற்படப் போகிற விளைவுகளைக் கருதி இன்னும் சஞ்சலப்பட்டது.

அன்று காலையில் அவனுக்கும் அமைச்சர் ஆதித்தருக்கும் மன்னரின் முன்னிலையில் நடந்த தர்க்கம் அவன் நினைவில் திரும்பத் திரும்ப வலம் வந்தது. கொங்குப் பாண்டிய இளவல் குலசேகரன் சற்று உஷ்ணமாகவே அமைச்சரிடம் கேட்டான். 'எதற்கு என்னை இந்த விவாதத்தில் கலந்து கொள்ள அழைத்தீர்கள்? நமது பழைய நட்பையும் பிணைப்பையும் முன்னிட்டு மதுரையைக் கைப்பற்றிய பின்னரும், இந்தச் சிற்றரசை விட்டு வைத்திருக்கும் சோழருக்கு எதிராகப் போர் தொடுக்கச் சித்தமாவதைப் பார்த்துக் கொண்டிருக்கவா? அல்லது நமது மணிமுடியையும் வாளையும் பெருந்தன்மையுடன் கொடுத்துச் சென்ற குலோத்துங்கரின் பரம வைரியான ஈழத்தவருடன் தொடர்பு கொள்வதைப் பார்த்துக் கொண்டிருக்கவா? இருக்கும் இந்தச் சிற்றரசும் நமக்கு நிலைக்காமல் போவதைப் பார்க்கவா? இதற்காகவா எனக்குக் கல்வியும் இத்தனை போர்ப் பயிற்சியும் அளித்தீர்கள்?''

- படபடவென்று பொரிந்தான் குலசேகரன்.

அமைச்சரின் பதில் அமைதியுடன் வந்தது : ''பொறு, குலசேகரா! ஆத்திரப் படாதே. மதுரையில் பாண்டிய அரசு ஸ்திரமாக அமைவதையும் நமது கொங்கு நாடு நமக்கு மீள்வதையும் விரும்பவில்லையா நீ?''

''ஸ்திரமாக அரசு நடத்தி சோழருடன் நட்பு பாராட்டிய ஜடாவர்மரைக் கொன்று நாட்டைப் பங்கு போட்டுக் கொண்ட இந்த மார்த்தாண்டரும் மாறவர்மரும் நிலையான அரசையோ, மக்களுக்கு நிம்மதியான வாழ்வையோ அளிக்க இயலும் என்று எண்ணுகிறீர்களா?''

''குலசேகரா, என்ன இருந்தாலும் மற்ற பாண்டிய அரசுகள் இணைந்து போராடும் போது நமது ஆதரவையும் அளிப்பதுதானே முறை?''

''அமைச்சரே, தனிப்பட்ட அரசுகள் ஆட்சியமைப்பதை விடுத்து மக்களை எண்ணிப் பாருங்கள். தற்போதுள்ள அமைதியும் நிம்மதியுமாவது மாறவர்மர் அரியணையேறினால் மக்களுக்குக் கிட்டுமா? சோழர்கள் வாளாவிருப்பார்களா? வீணான போரினால் அவதியுறப் போவது மக்கள்தானே.''

அமைச்சருக்கு அவன் வாதத்தின் போக்கு புரிந்தது. 'இத்தகைய பெரும் போக்கான எண்ணம் கொண்டவன் மதுரை அரியணையில் அமர்வது எத்தனை நன்மை தரும்!' என்ற எண்ணமும் அவர் சிந்தனையில் ஓடியது.

குலசேகரன் தொடர்ந்தான் : ''சோழர் படைபலம் தெரியாதா உங்களுக்கு? சாளுக்கிய விக்கிரமாதித்தனே இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிறான். ஏன்? இப்போது நடந்த மேலைமங்கலப் போரை மறந்து விட்டீர்களா?'' - என்றவன் இறுதியாக ஒரு கேள்வியும் கேட்டான். ''இந்தப் போர் ஏற்பாட்டுக்கு நமது படைத் தலைவர் மோகூர்ப் பழையர் ஒப்புக் கொண்டாரா?''

''ஒப்புக் கொண்டு விட்டார்'' என்ற பதில் வாயில்புறத்திலிருந்து வந்தது. விரக்தியான புன்னகையுடன் மன்னனை வணங்கிய படியே உள்ளே நுழைந்தான் மோகூர்ப் பழையன்.

ஐந்து கதிகளையும், பதினெட்டுச் சாரிகைகளையும் போர்ப் புரவிகளுக்குப் பயிற்றுவிப்பதில் தமிழகத்தின் மிகச் சிறந்த வாசிவாரியன் * என்று பெயர் எடுத்தவனும், புரவிப் படையை இயக்குவதில் நிபுணன் என்று குலோத்துங்க சோழனாலேயே பாராட்டப்பட்டவனும், பெரும் வீரனும், கொங்குப் பாண்டியர் படைத் தலைவனுமான மோகூர்ப் பழையன் உள்ளே நுழைந்து அமைச்சரையும் வணங்கி நிமிர்ந்தான்.

''தாங்கள் எப்போது வந்தீர்கள் படைத்தலைவரே?'' - குலசேகரன் வினவினான்.

''சோழர் படைபலத்தைப் பற்றி நீங்கள் கூறிக் கொண்டிருக்கும்போதே வந்து விட்டேன்.''

''என் கருத்து தவறென்று நினைக்கிறீர்களா?''

''நமது கருத்துக்களை இப்போது பேசுவது தவறு இளவரசே. மாறவர்மருக்கு மன்னர் வாக்குக் கொடுத்து விட்டார். இனி நாம் அவருடன் இணைந்து போராடுவதுதான் முறை'' என்றான் பழையன்.

அதுவரை அவர்கள் வாதத்தைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த ஜெகவீர பாண்டியன் தெளிவாகக் கூறினான் : ''அமைச்சரே, குலசேகரா, நான் காண்பது எல்லாம் ஒன்றுதான். சோழனிடம் நாம் அடிமையாகக் கிடப்பதை நான் விரும்பவில்லை. ஒன்றுபட்ட பாண்டியர் படை கோட்டாறில் அணிவகுக்கிறது. சேரலாதர் உதவியும், ஈழத்து உதவியும் பக்கபலமாக நிற்கிறது. சோழர் படை வடக்கே போராடிக் கொண்டிருக்கிறது. இதை விட நல்ல சந்தர்ப்பம் அமைவது அரிது. இப்போது நாம் ஸ்திரப்படுத்திக் கொண்டால் குலோத்துங்கன் திரும்பிய பிறகும் உடனே நம்மை எதிர்க்கச் சற்று சிந்திப்பான். போரில் கலந்து கொள்ள குலசேகரன் அஞ்சுவதாக இருந்தால் சாலியூரில் சென்று நமது வீரர்களுடன் மருடத்தையும் வாளையும் காத்து நிற்கட்டும்.''

குலசேகரனது முகம் அந்திவானமாகச் சிவந்தது. தான் போருக்கு அஞ்சுவதாகத்

* மலைகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விருஷபகதி என்ற பஞ்சகதிகளையும், பாய்ச்சல்களில் பதினெட்டு சாரிகைகளையும் போர்ப் புரவிகளுக்குப் பயிற்றுவிப்பவன் வாசிவாரியன்.

## அருள்வாக்கு



பிரம்மஞானியான முனிவன் மௌனம், மௌனமாயில்லாமலிருப்பது என்ற இரண்டையும் விட்டு விடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. முதலில் படித்துப் பண்டிதனாகி, ரொம்பவும் வாதங்கள் சர்ச்சைகள் பண்ணி ஸத்ய தத்வத்தைத் தெரிந்து கொள்கிறான். அப்புறம் பாண்டித்யம், பேச்சு எல்லாவற்றையும் விட்டு விட்டு ஒரே நிஷ்டையில் போய் விடுகிறான். அப்புறம் பிரம்ம ஞானியாகிற போது மௌனத்தையும் விட்டு விடுகிறான், மௌனமில்லாமையையும் விட்டு விடுகிறான் என்று உபநிஷத் சொல்கிறது. இப்படிச் சொன்னால் அது எப்படி ஸாத்யம்? ஒன்று பேச்சை விட்டு மௌனமாக வேண்டும்; அல்லது மௌனத்தை விட்டுப் பேச வேண்டும். இரண்டையுமே விடுவது என்றால் எப்படி முடியும்? அந்த ஞானியின் நிலைக்குப் போனால்தான் இது புரியும். அவனுக்கு மனஸ் என்றே ஒன்று இருக்காது. அதனால் அவனுக்குப் பேச வேண்டும் என்றோ, பேச வேண்டாமென்றோ எந்த சொந்த அபிப்பிராயமும் ஆசையும் இருக்காது. லோகாநுக்ரஹத்துக்காக அவன் மூலம் உபதேசமாகப் பேச்சு வந்தாலும் அவன் பேசினதாக நினைக்க மாட்டான். அதைவிடப் பெரிய மௌன உபதேசத்தில் தக்ஷிணாமூர்த்தி மாதிரி அவனைப் பராசக்தி உட்கார்த்தி வைத்திருந்தாலும் 'நாம் மௌன வ்ரதம் என்று ஒன்று அநுஷ்டிக்கிறோம்' என்று அவன் நினைக்க மாட்டான். இதைத்தான் மௌனம், அமௌனம் இரண்டையும் விட்ட நிலை என்பது.

அது நமக்கு ரொம்ப தூரத்தில் இருக்கிற லக்ஷ்யம்.

நடைமுறையில் நாம் கொஞ்சம் மௌன உபவாஸத்தை அநுஷ்டிக்க ஆரம்பிக்க வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

தந்தை கூறியது அவன் உள்ளத்தை வாள் கொண்டு அறுத்தது.

விறுவிறுவென்று வெளியேறினான் குலசேகரன். அமைச்சர் மன்னனைக் கடிந்து கொண்டார் : ''மன்னர் இத்தனை கடுமையாகப் பேசியிருக்கக் கூடாது!''

ஜெகவீர பாண்டியன் பெரிதாக நகைத்தான்.

''என் மகனுடைய வீரத்தைப் பற்றி எனக்குத் தெரியாதா அமைச்சரே? அவன் வீரத்தைச் சற்றுக் கிளறி விடவும், போரில் கலந்து கொள்ளச் செய்யவுமே அப்படிக் கூறினேன். அதிருக்கட்டும். நமது ஆயுத சாலைகள் இரவும் பகலும் இயங்கட்டும். போர்ப் பயிற்சிகளைத் தீவிரமாக்குங்கள். மாறவர்மரிடமிருந்து செய்தி கிடைத்ததும் படைகள் கிளம்பச் சித்தமாக இருக்கட்டும்'' என்றான் மன்னன்.

**பா**ண்டி நாட்டு மறவர் படை கோட்டையின் பெரும் திடலில் அணிவகுத்து பயிற்சிகளைத் தொடர்ந்தது.

மோகூர்ப் பழையனின் புகழ்பெற்ற புரவிப் படை புழுதி கிளம்பப் பாய்ந்தது, நடந்தது, பகுதி பகுதியாகப் பிரிந்து சேர்ந்தது, பின் அகர கதியில் சுற்றி ஓடியது. முன் கால்களை உயர்த்தி பூமியை உதைத்தது.

காற்றில் விர்விர்ரென்று பாய்ந்து இலக்குகளை அடைந்த அம்புகளின் ஒலியும், புரவிகளின் கனைப்பொலியும், வாட்கள் மோதிய ஒலியும் காற்றில் நிறைந்தன. கோட்டையின் மீது நின்று பார்வையிட்ட மன்னனுக்கு அந்த ஒலிகள் இனிய சங்கீதமாக ஒலித்தன.

கோட்டைக்கு வெளியே ஆற்றின் கரையிலிருந்த குலசேகரனின் செவிகளில் மன்னனது வார்த்தைகள் மீண்டும் மீண்டும் எதிரொலித்தன. கொந்தளித்த மனத்துடன் புரவியில் பாய்ந்து ஏறினான்.

இலக்கு ஏதுமின்றிப் பாய்ந்த புரவி, சோலைகளையும் இரண்டொரு கிராமங்களையும் கடந்து கடற்கரையை அடைந்து நின்றது.

கரையில் மோதிய அலைகளை விட குலசேகரன் சித்தத்தில் மோதிய அலைகள் பலமாக இருந்தன.

நீலக்கடலின் விரிந்த பரப்பை நோக்கிக் கொண்டிருந்தவன் சற்றுத் தள்ளி பெரும் மரக்கலமொன்று நிற்பதைக் கண்டான். நீலக் கடலிலிருந்து எழுந்து நிற்கும் பெரும் சர்ப்பம் போன்ற அதன் முகப்பையும், பக்கத்துக்கு அறுபது துடுப்புகளுக்குக் குறையாத அதன் நீளத்தையும், அதன் மீது வீரர்கள் பலர் நடமாடிக் கொண்டிருப்பதையும் பார்த்தான். அதன் உயர்ந்த பாய் மரத்தின் உச்சியில் கொடி மரத்தில் பாண்டிய நாட்டின் மீது பாயப் போவது போல் படபடத்த யாளிச் சின்னம் அது ஈழத்து மரக்கலம் என்பதை உணர்த்தவே, அவன் விழிகளில் மெல்ல செம்மை படரலாயிற்று.

அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பெரும்படகு ஒன்று கலத்திலிருந்து இறக்கப்பட்டது. ராஜ உடை தரித்த ஆஜானுபாகுவான ஒரு வீரன் நடுவில் நிற்க இரு புறங்களிலும் நான்கு வீரர்களுடன் அந்தப் படகு கரையை நோக்கி வரலாயிற்று.

படகு சற்று நெருங்கியதும் குலசேகரன் விழிகளில் விபரீதச் சாயை ஒன்று படர்ந்தது.

படகில் நிற்கும் வீரன் தான் அம்பு எய்யும் எல்லையைச் சமீபித்து விட்டதை உணர்ந்த குலசேகரன், புரவியின் பக்கவாட்டில் தொங்கிய தன் பெரும் வில்லை எடுத்தான். அம்பறாத் தூளியிலிருந்து கூர்மையான முனையும் வேகம் கொடுக்க அடிப்புறத்தில் புறாவின் சிறகுகள் பொருத்தப்பட்டதுமான ஓர் அம்பை எடுத்தவன், அதை நாணில் பொருத்தி, படகில் நிற்பவனின் மார்புக்குக் குறிவைத்து, காது வரை நாணை இழுத்தான்.

படகில் நின்றபடி வந்த வீரனோ, படகைத் தள்ளிய காவலரோ, கரையில் ஒருவன் வில்லை வளைத்து நிற்பதையோ, அந்த வில்லில் பொருத்திய அம்பின் முனை, படகில் நிற்பவனைக் குறிவைப்பதையோ கவனித்ததாகத் தெரியவில்லை.

போர் வில்லில் நன்றாகப் பயிற்சி பெற்றிருந்த குலசேகரன் விடுத்த அம்பு, கன வேகமாகக் காற்றைக் கிழித்தபடி படகில் நின்றவனின் மார்பை நோக்கிப் பாய்ந்தது.

(தொடரும்)



''உங்க கட்சியில கட்டுப்பாடு ஜாஸ்தியாமே!''

''உம்... கவிதை எழுதத் தெரியாதுன்னு கடிதம் கொடுத்ததுக்குப் பிறகு தான் கட்சி உறுப்பினராச் சேர விண்ணப்பப் படிவமே தருவாங்க!''

- பி. ஜி. பி. இசக்கி



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இரங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 110 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஓர் நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்குகொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும் :

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த**
**தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் - 612 001.**

செக் (or) டிராப்ட் முதலியவைகளை A.V.M.S.G.D.P.S. ஸமிதி என்ற பெயருக்கு அனுப்பலாம்.

*****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு*****

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I
1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் - ரூ. 265/-
2. யஜுர்வேத தைத்திரீய ஸம்ஹிதா - 7 காண்டங்கள் - விலை ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - கிரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 165/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 85/-)
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - கிரந்தாக்ஷரம் - ரூ. 80/-
6. சாந்தி குஸுமாகரம் (2 பாகங்கள்) - விலை ரூ. 170/- (1 ம் பாகம் ரூ. 85/- 2 ம் பாகம் ரூ. 85) (கிரந்தாக்ஷரம்)

II கிரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட கிரந்தங்களின் மறுபதிப்புகள்
1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III நாகராக்ஷரம்
1. மனாசேச்லோக - ராமதாஸாசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாகிருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதயம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்கிருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வடமொழிச் சொற்கடல் - ஸம்ஸ்க்ருதம் தமிழ் Dictionary 2 முதல் 8 தரங்கங்கள் வரை, முதல் தரங்கம் நீங்கலாக - ரூ. 70/-)
5. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுஸ், ஸாம - ரூ. 25/-
6. ராமோதந்தம் - நாகராக்ஷரம் - விலை ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத் தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம். "எமது நூல்கள் பற்றிய விவரமான கேட்லாக் வாங்க விரும்புவோர் ரூ. 3/- தபால்தலை அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்."

**பிரஸிடெண்ட் - டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. ஸமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம் - 612 001.**

நேரில் வாங்க விரும்புவோர் கண்டிப்பாக - ராஜா வேதகாவ்ய பாடசாலை, யாகசாலை தெரு, (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001 என்ற விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும்.





# ஊர் சிரிக்கும் போது...

**வா**சல் திண்ணையில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த நான் எதேச்சையாய் நிமிர... என் கண்களில் எதிர் வீட்டு ராமநாதன் பட்டான். நேற்றைய போதையிலிருந்து ஆள் தெளிந்திருந்தான்.

'இவனைக் கூப்பிட்டுப் பேசிப் பார்த்தாலென்ன?' - நினைப்பு தோன்ற, அதைச் செயலாக்கினேன்.

''ஹலோ ராமநாதன்... கொஞ்சம் வந்துட்டுப் போறீங்களா?''

நான் அழைத்ததும் மிகவும் பவ்யமாக வந்தான். நேற்றிருந்த ராமநாதனுக்கும் இன்றைய ராமநாதனுக்கும் எத்தனை வித்தியாசம்!

''உக்காருங்க...''

- நான் சொல்ல... எனக்கெதிரே திண்ணையில் தயக்கமாய் உட்கார்ந்தான். அவன் முகத்தில் சங்கடம் தெரிந்தது.

இதற்கிடையே ஜன்னலில் என் மனைவியின் முகம் நொடித்து விட்டுப் போனது. அந்த நொடிப்பில் 'இது தேவை தானா?' - இருந்தது.

''மிஸ்டர் ராமநாதன், நான் சொல்றேனேன்னு வருத்தப்படாதீங்க... நேத்து ராத்திரி நீங்க...''

நான் மேட்டரைத் தொடங்கும் முன்பு அவனே இடைவெட்டிப் பேசத் தொடங்கினான்.

''சாரி சார். அதை நெனச்சா எனக்கே ரொம்ப வெக்கமா இருக்கு. அந்தப் பாழாப் போன 'ட்ரிங்ஸ்'ஸால... பாவம் சார் என் வொய்ஃப்... அவளப் போயி கண்ணு மண்ணு தெரியாம அடிச்சிட்டேன். அதோட தெருவே கூடி வேடிக்கைப் பார்க்குற அளவுக்கு நியூசென்ஸா நடந்திருக்கேன். ரியலி ஐ ஃபீல் வெரி சாரி சார். போதையோட கொடூரம் என்னன்னு விடிஞ்சப்புறம்தான் சார் தெரியுது.''

அவன் குரலிலும் கவலை வழிந்தது. நான் எதையெல்லாம் சொல்லி, அவனுக்குப் புத்தி புகட்ட வேண்டும் என நினைத்தேனோ... அதையெல்லாம் அவனே நன்றாக உணர்ந்திருக்கிறான். இவனுக்கு அதிகம் சொல்லத் தேவையில்லை. திருந்துவான். நம்பிக்கை என்னுள் சுடர் விட்டது.

''பரவாயில்ல ராமநாதன். அதை நீங்களே உணர்ந்துட்டீங்க. செஞ்ச தப்ப உணர்றது பெரிய விஷயம். இனியாச்சும் ட்ரிங்ஸை விட்டுடுங்க.''

சொல்லி விட்டு அவன் கண்களைப் பார்த்தேன். அதில் ஈரம் இருந்தது. என் வார்த்தைகள் நிச்சயம் அவன் மனதைத் தொட்டிருக்கின்றன.

''இவ்வளவு அக்கறை எடுத்துக்கிட்டு எனக்கு அட்வைஸ் பண்ணின உங்களை நான் என்னிக்கும் மறக்க மாட்டேன் சார்!''

கைகூப்பி எழுந்து கொண்டான். மனம் சந்தோஷமாயிற்று.

**அ**வன் வாசல் தாண்டும் வரை பொறுத்திருந்த என் தர்மபத்தினி, அவன் பார்வையிலிருந்து மறைந்ததும் 'பிலுபிலு'வெனப் பிடித்துக் கொண்டாள்.

''இதென்ன வேண்டாத வேலை. யார் எப்படிப் போனா உங்களுக்கென்ன?





**ஆரூர் தமிழ்நாடன்**

குடிக்காதன்னு சொன்னா கடலலை கேக்குமா? பெரிய புத்தர்னு நினைப்பு!''

வார்த்தை வார்த்தையாய் சவுக்கு வீசுகிறாள். அதிலும் இலக்கியத்தனமான சவுக்கு! வீச்சில் அவள் படிப்பு தெரிகிறது. வீசட்டும்.

பெண்ணென்பவள் சுயநல ஜீவன். தன் வீடு தன் குடும்பம் என்று குறுகிய வட்டத்தில் வாழும் ஜீவன். படிப்பிற்கும் இந்தப் பண்புக்கும் சம்பந்தமில்லை!

**ப**ரபரப்பாக அலுவலகம் கிளம்பி - அங்கு மொத்த மொத்த ஃபைல்களோடு யுத்தம் நடத்தி - மேலதிகாரிகளிடம் - குனிந்து குனிந்தே கூனலாகி - பேருந்து நெரிசலில் சாறு வராமலேயே சக்கையாகி - ஒரு வழியாய் வீடு வந்து சேர்ந்ததில் ராமநாதனை முற்றிலுமாய் மனசு மறந்திருந்தது. இரவுச் சாப்பாடு முடிந்து 'அக்கடா' என்று படுக்கையில் விழுந்த போது...

பால் தம்ளரைக் கையில் கொடுத்து விட்டு உரசினாற்போல் உட்கார்ந்தாள் மனைவி. மெல்லச் சிரித்து உள்ளுக்குள் தீ வைத்தாள். எப்படித்தான் என் அந்தனை அலுப்பும் போனதோ தெரியவில்லை. அப்போதுதானா அது நடக்க வேண்டும்...? வாசல் பக்கம் அந்த சப்தம் கேட்டது. ராமநாதனின் குரல்தான் பழையபடி வேதாளம் முருங்கைமரம் ஏறி விட்டது.

''டேய்... எங்காக நான் குடிக்கிறேன். எம் பொண்டாட்டி, நான் அடிக்கிறேன். அதை யாருடா கேக்குறது? கண்ட கண்ட பசங்க எனக்கு அட்வைஸ் பண்றானுங்க... வெளில வாங்கடா...!''

என் மனைவியை விலக்கி எழுந்து கொண்டேன். அவள் முகத்தை ஏறிட்டுப் பார்க்கச் சங்கடமாக இருந்தது. நாளை தெருவே என்னை இளப்பமாய்ப் பார்க்கும். 'கிகிகெ'த்துச் சிரிக்கும். வேடிக்கை பார்க்கும். எல்லாம் வேடிக்கைதான்! கூட்டத்திற்கு, பைத்தியக்காரனும் - அவனிடம் கல்லடி படுபவனும் ஒன்றுதான். மனசு இருண்டு போனது.

வர வர அவன் சப்தம் அதிகரித்தது.

வாசல் ஜன்னலைத் திறக்க நீண்ட என் கைகளைத் தடுத்துப் பற்றிய என் மனைவி ஆறுதலாக என்னை அணைத்துக் கொண்டாள்.

''கவலைப்படாதீங்க... என்னிக்காச்சும் ஒருநாள் உங்க அட்வைஸ் அவனை மாத்தும். நிச்சயம் அவனிடம் மாறுதல் வரும்.''

கிசுகிசுப்பாய், மிருதுவாய், ஆழமாய் அவளின் குரல் காதோரத்தில் ஒலித்தது - வார்த்தை சவுக்கை வீசிய வாயிலிருந்து இதமான ஆறுதல் சொற்கள்!






* 'ஃபுட்போர்ட்' பெண்மணிகள்

# இது ஒரு தனி உலகம்..

வருஷாந்திர ரயில்வே பட்ஜெட்டில் எந்த வருஷமாவது புறநகர் ரயிலுக்கான சாதா டிக்கெட், சீசன் டிக்கெட்டுகளின் விலை குறைக்கப்பட்டிருக்கிறதா என்று தெரியவில்லை. மாறாக ஒவ்வொரு முறையும் பிரும்ம ராக்ஷஸன் மாதிரி ரேட் பயமுறுத்தியபடிதான் இருக்கிறது. ஆனால் என்னதான் டிக்கெட் விலை ஏறினாலும் சர்வீஸ் போட்ட ரயில் பயணிகள் பஸ்ஸுக்கு மாறுவதில்லை.

சென்னை மாநகரின் முக்கியமான ரயில் ரூட்டான தாம்பரம் - பீச் ஸ்டேஷன் இடையிலான ஒன்னேகால் மணி நேரப் பயணப் பொழுதை தங்கள் வாழ்வின் தவிர்க்க முடியாத அம்சமாக்கிக் கொண்டு விட்டார்கள் ஆயிரக்கணக்கானவர்கள் - அப்படி என்னதான் அவர்கள் ரயிலில் சுகம் காணுகிறார்கள் என்று நேரில் கண்டறியும் ஆவல் ஏற்பட்டது. ஒரு உன்னதமான காலைப் பொழுதில் நமது 'பயண'த்தை ஆரம்பித்தோம்.

பல மணி நேரப் பயணத்தில் 'சாம்பிள்' ஆகச் சில பல பேரிடம் பேசியதன் விளைவு... கீழ்க்கண்ட காரணங்களுக்காக மக்கள், ரயில் பயணத்தை அதிகம் விரும்புகிறார்கள் என்று தெரியவந்தது.

1. பஸ்ஸில் ஏற்படுவதைக் காட்டிலும் ரயிலில் செல்லுவதால் பயண அலுப்பு குறைவு.

2. அரசியல் அக்கப் போர், சினிமா கிசுகிசு உள்ளிட்ட பல அதிமுக்கியமான விஷயங்களின் அரங்கேற்ற மேடை.. செலவில்லாமல் செய்தி அறிக்கை!

3. தென்றல் தாலாட்டும் உன்னதமான உறக்கம். நின்றபடியும் தூங்கலாம். அடுத்தவர் முதுகில் தலை வைத்து.

4. அடிக்கடி செக்கிங் தொந்தரவு இல்லை. காலை வேளைகளில் இல்லவே இல்லை. அப்படியே 'டிடிஆர் மாமா' ஏறினால் அடுத்த கதவு வழியே இறங்கி விடலாம்.

5. 'வெண்டார்'ஸில் ஏறினால் தொந்தரவின்றி தம்மடிக்கலாம்.

6. திருட்டுச் 'சரக்கர்'களின் வசதிக்காக எக்மோர் பிரிட்ஜ், ரிஸர்வ் பேங்க் சப்வே ஆகிய இடங்களில் 'சிறப்பு சிக்னல் சர்வீஸ்' நடத்தப்படுகிறது.

7. கிருத்தவக் கல்லூரி, வைஷ்ணவா, செல்லம்மாள், மீனாட்சி கல்லூரிப் பறவைகள் இவ் வழியே அதிகம் பயணப்படுவதால் ரோட்டோர ரோமியோக்கள் தங்கள் கல்லூரிகள், சகாராவில் இருந்தாலும் இவ் வழியே மட்டுமே பயணப்பட பெரிதும் விரும்புகிறார்கள்.

இப்படியான காரணங்களைப் பட்டியல் போட்டால் ஒரு சிறப்பிதழ் பண்ணலாம்! நிற்க.

**தி**னக்கூலி நபர்களிலிருந்து நாற்காலிக்காரர்கள் வரை சங்கமிக்கும் கம்பார்ட்மெண்ட்களில் அடல்ட்ஸ் ஒன்லி சமாசாரங்களிலிருந்து ஹர்ஷத் மேத்தா விவகாரம் வரை தேசத்தின் நாடி பிடித்துப் பார்க்கப்படுகிறது. அவ்வப்போது உதிரும் பொன்மொழிகள், விமர்சனங்கள் உயர்ந்த ரசனையில் விளைபவை. சாம்பிளுக்கு ஒன்று :

ஒரு பாங்க் ஊழியர் : ''இந்த கருணாநிதி ரொம்ப மோசங்க. மனோகரா, பொறுத்தது போதும் பொங்கி எழுன்னு சொல்வாரு. மனோகரன் பொங்கி எழுந்தா டிஸ்மிஸ் பண்ணிடறாரு. எழுதறது ஒண்ணு, செய்யறது ஒண்ணு!''

**உ**க்கிரமான வெயிலில், உடம்பு பிசுபிசுக்கும் காலை வேளைகளில் சில பயணிகள் 'பெருந்தன்மையோடு மக்கள் பணிகளில்' ஈடுபடுவதைப் பார்க்க முடிகிறது. பாட்டுக் கச்சேரி. ஜால்ரா, டிபன்பாக்ஸ் மேளம், மௌத் ஆர்கன் உள்ளிட்ட வாத்திய கோஷ்டி.

7:50 கூடுவாஞ்சேரி வண்டியில் லேடீஸ் கம்பார்ட்மென்ட்டுக்கு முந்தின பெட்டி. இதில் பிரதான பாடகரான பாலமுருகனுக்குக் கிட்டத்தட்ட நூறு பாடல்கள் மனப்பாடம். எல்.ஆர். ஈஸ்வரி, பி. சுசீலா பாடல்களை செந்தில், சார்லி குரலில் பாடுவதில் கில்லாடி. பெரும்பாலும் பக்திப் பாடல்கள் மட்டுமே பாடுவதற்கான காரணத்தைக் கேட்ட போது ''நம்ம ரயில்வேயை நம்ப முடியாதுங்க. எந்த நேரத்துல எங்க கவுப்பாவோ! அதான், எதுக்கும் இருக்கட்டும்னு சாமி பாட்டாப் பாடிடறது.''

இந்த கோஷ்டி தவிர, வெண்டார்ஸ் கம்பார்ட்மெண்ட்டில் காலை எட்டு மணி வண்டியில் ஒரு குழு உண்டு. டப்பாங்குத்துக்களுக்கு மட்டுமே முக்கியத்துவம் தரும் இவர்களின் ஆர்க்கெஸ்ட்ரா, தகரத் தடுப்புச் சுவர்தான். பிரசித்தி பெற்ற 'லாலாக்கு டோல் டப்பிமா' இவர்களின் கடவுள் வாழ்த்து.

இப்படியான குழுக்கள் ஒருபுறம் என்றால், சித்தியடைந்த யோகிகள் போல மௌனம் காத்து, சீட்டு யாகம் நடத்தும் பெரிசுகள் ஒருபுறம். அநேகமாக ரிடையராகப் போகிறவர்கள். அடிவாயில் புகையிலையுடன் பி.எஃப், கிராஜுவிட்டி என்பதாகப் புலம்புகிறவர்கள். இடையிடையே 'நான் டிக்ளேர்'.

தாம்பரத்திலிருந்து தினமும் ஜ.சி.எஃப் செல்லும் சீட்டுப்ரியர் கங்காதரனை, 'இப்படி பப்ளிக்காகச் சீட்டாடுவது தப்பில்லையா' என்று கேட்ட போது, ''அட போங்க சார்! நாட்டுல அவவன் பப்ளிக்கா பெட்டி பெட்டியா 'நோட்'ஆடறான். நாங்க சீட்டாடறதுல என்ன தப்பு?''

இப்படியான 'தீராத விளையாட்டுப் பிள்ளைகள்' தவிர வேறு சில குழுக்கள் பயணத்தை ஜாலி படுத்தும் பணியில் ஈடுபட்டிருக்கின்றன. அவர்களின் ஒரே ஆயுதம் பேச்சு!

தாம்பரத்திலிருந்து காலை 8:50க்குப் புறப்படும் துரித ரயிலில் இப்படி ஒரு கும்பல் வெகு பிரசித்தம். ஏழெட்டு பேர்கள் அடங்கிய இக்குழு, வங்கி ஊழியர்களால் ஆனது. மணக்கும் பேச்சுக்கு பான்பராக் ராமபத்ரன். ஹிண்டுவை விட்டுத் தலை எடுக்காத விஜயராகவன். சிம்மக் குரலுக்குச் சிவகுமார். மற்றும் சில சில்லறைப் பேச்சாளர்கள். வருஷக்கணக்கில் ஒரே கம்ப்பார்ட்மெண்ட், ஒரே சீட், இவர்களது ஸ்பெஷாலிட்டி!

• வரதராஜன்



• நாகராஜன்



பெரும்பாலும் ஆபீஸ் விஷயங்கள் ('அந்த மேனேஜர் கிழம் எங்கிட்ட அடி பட்டே சாகப் போறான்') மற்றும் 'இந்த மாதிரி டிரெஸ்ல ஜயா எப்படி?' 'அம்பி, ஆத்துல என்ன சமையல்' இப்படியான ஆர்டினரி வசனங்களைக் கேட்டு அலுத்த பயணிகளுக்கு மேற்படி குழு நட்சத்திர விருந்தளிக்கிறது.



● நேரத்தை வீணாக்காமல்

''இவங்க இருக்கறது னாலதாங்க கும்பலா



● வழியே மயம்

இருந்தாலும் இந்த ட்ரெயின்ல வர்றேன்'' என்கிறார் செங்கல்பட்டிலிருந்து மாம்பலம் வரும் மோகன்.

ஜெனரல் கம்ப்பார்ட்மென்ட்களில் பெரும்பாலோர் பிரச்னையாகக் கருதுவது பிச்சைக்காரர்களை. பழவந்தாங்கலிலிருந்து பார்க் வரை செல்லும் PWD பணியாளர் பாலசுப்ரமணியம் சொல்கிறார். ''ஒருத்தர், ரெண்டு பேர்னா பரவால்லை சார்! ஒவ்வொரு ஸ்டேஷன்லயும் ஒவ்வொருத்தர் ஏர்றாங்க. காசு போடறோம், போடலை - அது இல்லை பிரச்னை. கண்ணு தெரியாதவங்க, குஷ்டரோகிகள்லாம் 'பீக் அவர்ஸ்ல' உள்ள வந்து, போக வர இடம் விடாம ரப்சர் பண்றாங்க. அவங்க மேல உரசிக்கிட்டே போக வேண்டியிருக்கு. நாம ஒண்ணும் அன்னை தெரசாவோ, மகாத்மா காந்தியோ இல்லை. கோபம் வருது. ஏதாவது சொன்னா அசிங்கமாத் திட்றாங்க. பதில் பேச முடியறதில்லை.''

முதல் வகுப்புப் பிரயாணிகளுக்கு இந்தக் கவலை இல்லை என்றாலும் அங்கே நிலைமை வேறு, ''காலை மற்றும் மாலை (கும்பல்) நேரங்களில் டிக்கெட் வாங்கிய பயணிகள் பலர் முதல் வகுப்பில் ஏறி விடுகிறார்கள். பெரும்பாலும் இங்கு செக்கிங் வருவதில்லை. வந்தாலும் சமாளித்துக் கொள்ளலாம் என்கிற தைரியம். இதனால் அதிக செலவில் ஃபர்ஸ்ட் கிளாஸ் சீசன் வாங்குவதன் பயனே கிடைப்பதில்லை. சமயங்களில் நின்றபடி கூடப் போக வேண்டி இருக்கிறது'' இப்படிச் சொல்பவர் உமா சபேசன். பிலிப்ஸில் பணியாற்றும் பழவந்தாங்கல்காரர்.

''பிரச்னையா? ரயிலிலா? சான்ஸே இல்லை! சொர்க்கம் சார், அது!'' - இது C.A. மாணவர் நாகராஜன். குரோம்பேட்டையிலிருந்து தினமும் மாம்பலம் வரை ரயிலில் சென்று வரும் அரைமணியை, 'கடவுள் கொடுத்த பரிசு' என்கிறவர்.

''ஆயிரம் டென்ஷன் சார் வீட்ல! வெளில போனாலும் ஏதாவது கவலை, வேலை... நாள் பூரா நாம், நம்ம வசத்திலேயே இருக்க முடியறதில்லை. லைஃபே மெக்கானிக்கலா போயிடுச்சி. இந்த அரைமணி ரயில்ல போற நேரம்தான் நான், நானா இருக்க முடியுது. எத்தனை ஜனங்கள்! விதவிதமான பேச்சு! விதவிதமான அனுபவம். எவ்வளவு கும்பல் இருந்தாலும் ஒரு மாதிரி பாதுகாப்பா உணர்கிறோமே தவிர எரிச்சலே வர்றதில்லை. பஸ் மாதிரி உறுமல் சப்தமில்லை. டான்ஸ் மாஸ்டர் ஜதி சொல்றாப்ல சீரான சப்தம்...''

விட்டால் ரயில்லேயே குடும்பம் நடத்தி விடுவார் போலிருந்தது!

நாம் சந்தித்த நபர்களில் டிக்கெட் விலை குறித்து கவலை தெரிவித்த ஒரே ஆள் ஸ்டேட் பாங்க் ஊழியர் வரதராஜன். ''கவர்மெண்ட், கொஞ்சம் இரக்கம் காட்டலாம் சார்! குரோம்பேட்டைலேர்ந்து கிண்டி வந்தாலும் நாலு ரூபாய். எக்மோர்ல இறங்கினாலும் நாலு ரூபாய். வயத்தெரிச்சலா

இல்லை? பஸ்ஸுல போய்த் தொலைக்கலாம்னா உடம்பு சுகம் கண்டுபோச்சு. அடுத்த கவர்மெண்ட்டாவது ஏதாவது செய்யுதா பார்ப்போம்!''

**எ**ட்டு பெட்டிகள் கொண்ட வண்டியில் முதலும், முடிவும் தாய்க்குலத்திற்கு முற்றிலும் மாறுபட்ட இந்த உலகின் அங்கத்தினர்கள் கல்லூரி, பள்ளி மாணவிகள், பணிபுரியும் மிடில் கிளாஸ் பெண்கள் மற்றும் கூடைக்காரிகள்.

சமையல் மட்டும் வீட்டில். மற்றபடி சாப்பிடுவது, தலை வாருவது, மேக்அப், (டச்-அப்), வார இதழ்களில் 'யார் இவர்' பார்த்து மண்டையை உடைத்துக் கொள்வது, பிள்ளைகளுக்குப் பாடம் நடத்துவது, ஹோம்ஒர்க்கில் தான் தவறு செய்து விட்டு குழந்தைகளைக் 'குட்டி', அலற விடுவது, ஆணழகன் கமலா, கார்த்திக்கா என்று பகிரங்க வாக்கெடுப்பு நடத்துவது, அரவிந்த சாமியின் நிச்சயதார்த்தம் பற்றி குமுதத்தில் ப்ரியா சொல்லியிருப்பது சரியா, தப்பா என்று பட்டிமன்றம் நடத்துவது, தவிரவும் வழக்கமான மாமியார் மசாலா, நாத்தனார் நாத்தங்காய் இத்யாதிகள்.

ரயிலில் வேலைக்குப் போகும் பெண்கள் மார்க்கெட் போவதை தற்சமயம் கணிசமாகக் குறைத்திருக்கிறார்கள். காரணம், கருவேப்பிலையிலிருந்து கண் மை வரைக்கும், ஹேர்பின் முதல் ரெடிமேட் பாவாடை வரைக்கும் சகலமும் கம்பார்ட்மெண்டிலேயே வந்து விடுகிறது.

இவர்களது பிரச்னைகள் பெரும்பாலும் கூடைக்காரிகளைச் சார்ந்தவையே. ''கூடைக்காரிகள்தான் லேடீஸ் கம்பார்ட்மெண்டின் வில்லிகள்'' என்பவர் கல்லூரி மாணவி கமலி.

''அவர்களது அடாவடி வியாபாரம்,

---

### என்ன சினிமா தெரியுமா...?

''**ஏம்.** எம். ஏ. சின்னப்பா தேவர் தயாரித்த படம் என்பதற்கு அடையாளமாகக் காளை மாட்டுச் சண்டையிலிருந்து பலவிதமான கும்கும் குத்துக்களும் 'நாக் அவுட்'க்களுமாகப் படம் முழுவதும் நிறைந்திருக்கும் சண்டைக் காட்சிகளுடன் போட்டி போட்டுக் கொண்டு காதல் காட்சிகளும் நிறைய வருகின்றன. ஹீரோவும் ஹீரோயினும் ஆடாத ஆட்டம் எல்லாம் ஆடித் தீர்த்து விடுகிறார்கள். உடலைக் கவ்வும் சிக் உடையுடன் ஹீரோயினும் மனோரமாவும் அடிக்கும் கேலிக் கூத்துக்கள் ரொம்ப ஓவர். போப்பா ...யாக வரும் ஹீரோ கதையைப் பற்றியோ, தாம் ஏற்ற பாத்திரத்தைப் பற்றியோ கொஞ்சம் கூடக் கவலைப்படாமல், சைக்கிளில் போகிறார்;

---





சண்டை போடுகிறார்; காதல் காட்சிகளில் கட்டிப் புரள்கிறார். போதாக்குறைக்குப் பெண் வேஷம் வேறு போட்டுக் குதிக்கிறார். இதை யெல்லாம் பார்க்கும் போது தமிழ்ப் படங்களின் துர்ப்பாக்கிய நிலையை எண்ணித் தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றுகிறது. நாகேஷின் தமாஷ்களும் நடிப்பும் நன்றாயிருக்கின்றன. படத்திற்கு உயிர் கொடுப்பவரே அவர்தான்.''

(மேலே இருப்பது 1967 அக்டோபர் கல்கியில் பிரசுரமான ஒரு சினிமா விமரிசனத்தின் பகுதி. பெயர்கள் மறைக்கப்பட்டு இருக்கின்றன. எந்த சினிமா, ஹீரோ, ஹீரோயின் யார் என்று தெரிகிறதா?)

விடை 46 - ஆம் பக்கம்

- கே. ஆர். ராமச்சந்திரன்

வாங்கா விட்டால் அசிங்கமாகத் திட்டுவது. வேண்டுமென்றே இடித்துச் செல்வது, ஏதாவது கேட்டால், 'இன்னாங்கடி' என்று கோதாவில் இறங்குவது... இதுதான் இவர்களின் பொழுதுபோக்கு. இவர்களுடன் சண்டை போட யாரால் முடிகிறது?''

''பெண்கள் கம்ப்பார்ட்மெண்ட் ஒரு நடமாடும் மாதர் சங்கம்'' என்பவர் பானுமதி. நெடுநாள் ரயில் பயணி.

''உருப்படியா ஒரு விஷயம் பேச மாட்டாங்க! ஊர் வம்புதான் பிரதானம். இவளைப் பார்த்து அவள் கமெண்ட் அடிக்கறது, ட்ரெஸ் பத்தி கிண்டல் பண்றது, விட்டா, காலைல என்ன சமையல், வீட்டுக்காரருக்கு உடம்பு சரியில்லை இதைத் தவிர வேற ஒண்ணுமே உருப்படியா பேச மாட்டாங்க. போறாத குறைக்கு அப்பப்ப சண்டை வந்துடும். சீட் பிடிக்கறதுலதான் மெயின் சண்டை. இவங்க தொந்தரவு தாங்காம சில சமயம் ஜெனரல் கம்பார்ட்மெண்ட்டுக்கே போயிடறது.''

சற்று 'உள்ளே புகுந்து' விசாரித்ததில், பெண்களில் பலர் லேடீஸ் கம்பார்ட்மெண்ட்டைப் பெரிதும் வெறுப்பதை உணர முடிந்தது. ஆண்கள் நிறைந்திருந்தாலும் பரவாயில்லை என்று பொதுவான பெட்டிகளில் பயணம் செய்வதையே அவர்கள் விரும்புகின்றனர்!

''இந்த 'மகா உண்மை'யை ரயில்வே நிர்வாகமும் ஏற்று 'மனித குலத்தில் பிரிவினை(?) செய்யாமல் கம்பார்ட்மெண்ட்களைப் பொதுவாக்கினால் என்ன?' என்று கமெண்ட் அடித்தார் ஒரு 'பி.ஜே.பி.' நண்பர்!

- கிச்சா

பெண்கள் கம்ப்பார்ட்மெண்ட்
தகவல் திரட்டு : ஜெயஸ்ரீ
படங்கள் : கோபிநாத்

# நளினி சாஸ்திரி

## U.F.O.

*Unidentified Flying Objects* எனப்படும் பறக்கும் தட்டுகள் பற்றி இதிகாசங்கள் கூட தொட்டுப் போயிருக்கின்றன. 'வானத்தில் ஆயிரம் சூரியனின் வீரியத்தோடு எரிந்தது ஒன்று... அது அனைத்திலும் ஆற்றல்மிக்கது. அதுதான் என்னையும், இந்த உலகையும் அழிக்கும்' என்று மகாபாரதத்திலும், 'உலகின் ஆற்றல் - நெருப்பிற்கும், புகைக்கும் பாலமது; பத்தாயிரம் சூரிய வெளிச்சம் யாருமறியா ஆயுதம் அது சாம்பலையும் விட்டு வைப்பதில்லை' என்று ராமாயணத்திலும், 'அவர்களின் வான ஊர்திகள் விண்ணில் பறந்தன. எரியும் தீவுகளில் இறங்கி நடந்தார்கள். உலோகங்கள் உருகி ஓடின' என்று திபெத்திய டிஞ்யாவிலும் சொல்லப்படுவது இத்தகைய பறக்கும் தட்டுகளையே. நம்மூரிலும் அவ்வப்போது பறக்கும் தட்டுகளைப் பார்த்ததாகப் பலர் சொன்னாலும், அவை தடயம் எதுவும் விட்டுப் போகவில்லை. அதனால், விஞ்ஞானம் நம்பாமலே இருக்கிறது. பலர் போட்டோவெல்லாம் எடுத்துக் காட்டியும், அவை பொய்யென ஒதுக்கப்பட்டன. இருந்தாலும் ஒன்று நிச்சயம். பறக்கும் பொருட்கள் நமது விமான சூத்திரங்களைக் கடந்தவையாக இருக்க வேண்டும். விடை தெரியாவிட்டாலும், விஞ்ஞானம் வேற்று கிரகவாசிகளை வரவேற்கக் காத்திருக்கிறது.

- வில்சன்

எச்சரிக்கை!
எண்ணி ஐந்தே வாரங்கள்!
மிஸ் ரஷ்மி,
'டேனியல் ஸ்கூல்' தேடிப் படித்து
விடு!

அவசரப்பட்டு, முந்தி
முன்னால் வந்த, அத்யம்

எ

**எ**ல்லாம் தினமும் நடக்கின்றன. கொஞ்சமும் மாறுதல் இல்லாமல். ஆதவன் உதிக்கிறான். பறவைகள் புதிதாய்ப் பாடுகின்றன. வண்ண மலர்கள் கண் விழித்துப் புன்முறுவல் பூக்கின்றன. சுற்றும் வண்டினங்கள் இசைபாடுகின்றன. காற்று புத்துணர்ச்சியுடன் தடவிக் கொடுக்கின்றது.

எல்லாம் -

தினமும்.

தினமும்.

ஆனால் - அவன் வாழ்க்கையில் மட்டும் இன்னும் சந்தோஷக் காற்று வீசவில்லை.

மலரின் மொழி ஊமையாகி விட்டது.

எண்ணப் பூக்கள் மொட்டாகவே கருகுகின்றன.

சுற்றத்தினர் வசை பாடுகின்றனர்.

காரணம்,

அவன் வாழ்க்கையில் மட்டும் இன்னும் வேலைச் சூரியன் உதிக்கவில்லை.

அவனை அவனே மறந்து வருகிறான்.

அவன் யார்?

அவன்,

தன் கீழுள்ள பத்து அதிகாரிகளுக்கும் பத்துவித வேலையைப் பகிர்ந்து கொடுத்துப் பாங்காய்ப் பணிபுரியும் ஐ.ஏ.எஸ். ஆபீஸர்?

அவன்,

கம்ப்யூட்டரில் கபடி விளையாடி வாழ்க்கை வசதிகளை அதிகரிக்கும் டிஸைன் என்ஜினீயர்?

அவன்,

மக்களின் மன நோய்களைத் தீர்க்க முடியாவிட்டாலும் குறைந்தபட்சம் உடல் நோய்களையாவது குணப்படுத்தும் உன்னத டாக்டர்?

அவன்,

எதிர்காலச் சிற்பிகளை வடிக்கும் மதிப்பிற்குரிய ஆசிரியன்?

இல்லை. இல்லை.

# அத்மாவுக்கு அப்பால்

ஆனால்,

கனவுகளில் அவன் மன்னன். கனவு இன்டர்வியூவில் வெறும் பி.ஏ. மட்டும் படித்த அவனுக்கு எல்லாத் துறையிலும் முதலிடம் கிடைக்கிறது.

தினம் ஒரு வேலை கிடைக்கிறது.

அதனால்தான் இப்போதெல்லாம் நாளின் பெரும் பகுதியைத் தூங்கியே தீர்க்கிறான். இப்போது கூட தூங்கிக் கொண்டு தான் இருக்கிறான்.

இன்றைய கனவில் அவன் ஒருவேளை நாட்டின் பிரதமராகக் கூட இருக்கலாம்.

''ஏன்டா தடிமாடு. விடிஞ்சு எட்டு மணியாச்சு... இன்னும் தூங்கி என்ன முட்ட போடற? எழுந்திருடா. இன்னக்கி கூட ஏதோ சேல்ஸ் ரெப் வேணும்னு கேட்டிருக் கான். அப்ளை பண்ற வழியப் பார். கிருஷ்ண ஜெயந்தியும் நாளுமா பாத்து என் னடா தூக்கம் வேண்டியிருக்கு? எழுந்துரு!''

அப்பா சுப்ரபாதம் பாடினார்.

''ஏங்க குழந்தையத் திட்டறீங்க? அவன் தான் என்ன பண்ணுவான்? அவ னோட பொறந்த நாளும் அதுவுமா ஏன் முழிக்கற தூக்குள்ளே திட்றீங்க. நீ வாடா கண்ணு...''

அம்மா தன் பாசத்தைக் கொட்டினாள்.

''ஆமா சின்ன குழந்தை பாரு. போயி புட்டியில ஊத்திப் பால் கொடு போ!''

அவனைப் பொறுத்தவரை இது



எருமை மாட்டின் மேல் மழை பெய்த கதை தான். திட்டல்களுக்கு மரத்துப் போன மனம். நினைவில் தங்கிய கனவின் சில நொடிகளின் சந்தோஷத்துடன் அன்றைய தினம் ஆரம்பித்தது.

''அம்மா இன்னக்கி எதுக்குப் பாய சம்?''

''ஏன்டா கொழந்த இன்னக்கி ஒன் னோட இருபத்தஞ்சாவது பொறந்த நாள்டா!''

''அன்னா... கிருஷ்ணன் பொறந்த அன்னிக்கேவா பொறந்தான்?''



## மாலை நேர உதயங்கள்!

முதியோர் இல்லத்தில் சேர வேண்டிய நிலைமை வேதனைக்குரியது. நிராகரிக்கப்பட்ட உணர்வு விரக்தியை ஏற்படுத்தும். எல்லாவற்றையும் தொலைத்துவிட்ட இழப்பு கண்களில் தெரியும்.

இந்தப் பிரச்னைக்கு விடை கண்டார் சாவித்ரி வைத்தி. விச்ராந்தி என்ற பெயரில் தமது மேற்பார்வையில் நடக்கும் முதியோர் இல்லத்துடன் இணைந்து "மலர்ச்சி" என்ற அனாதைப் பெண் குழந்தைகள் இல்லம் ஒன்றையும் தொடங்கினார்.

பத்து பெண் குழந்தைகள் சேர்ந்திருக்கிறார்கள். அவர்களைப் பராமரிக்கும் பொறுப்பு பாட்டிகளிடமே விடப்பட்டது. பிறகென்ன? குளிக்க வைத்து, தலைசீவி, அருகில் உட்கார்ந்து உணவளித்து இந்தப் பேத்திகளைப் பார்த்துக் கொள்ள பாட்டிகளுக்குத்தான் எத்தனை சந்தோஷம்!

வாழ்க்கையின் விளிம்பில் நிற்பவர்களையும் அதன் ஆரம்பத்தில் இருப்பவர்களையும் இணைய வைத்திருப்பது ஒரு அற்புதமான ஐடியா அல்லவா?

- பாரதி.

கடைக்குட்டியின் கண்களில் ஆச்சரியம்.

"ஆமா கண்ணு! அவன் சாமி பொறந்த நால்ல பொறந்தவன். அதிர்ஷ்டக்காரன். கடவுள் அவதாரம். பெரிய ஆளா வரப் போறவன்."

அம்மாவின் நம்பிக்கை அவனுள் சிரிப்பை விதைத்தது.

"வேல கெடைக்கலைன்னு கவலப் படாத அண்ணா... திடீர்னு பெரிய அதிர்ஷ்டம் வரும்."

இது கடைக்கு முந்திய குட்டி.

"ஆமாம். தினமும் மேலே பார். கூரையப் பிச்சிண்டு அதிர்ஷ்டம் கொட்டப் போறது!" - விரக்தி பேசியது.

"அம்மா நான் ஒரு முடிவுக்கு வந்துட்டேன். வேல தேடி இல்லாத கானல் நீரைத் தேடறதை விட, புத்திசாலித்தனமா பிழைக்க முடிவு பண்ணிட்டேன். ஒரு பார்பர் ஷாப் ஆரம்பிச்சுடப் போறேன்."

"வறுமையின் நிறம் சிவப்பு உபயமா? வேண்டாண்ணே! நான் உங்கிட்டே வர மாட்டேன்" - கடைக்கு மு.கு.

"கத்தரிக்குப் பதில் நம்ம வீட்டு எலிய ரெண்ட வச்சிக்கோ நேக்கரலா கட் பண்ணும்" - க.கு.

"ஏண்டா குழந்தே... உம் புத்தி விபரீதமா போறது? நீ வேலைக்கே போக வேண்டாம்; பேசாம வீட்ல இரு போதும். ஏன் கவலைப்படறே? உடம்ப முதல்ல கவனி. துரும்பா இளச்சிருக்கே."

'இன்னும் ஒரு வாரத்தில் பேப்பர் திருத்த அப்பா கோயமுத்தூர் போகணும். அதுக்கு வேற நூறு ரூபா பொறட்டணும். ஒவ்வொரு பேப்பரா பொறுமைய சோதிக்க, முழுசா படிக்கத் திருத்தினா அதுக்கு ஒரு ரூபா. என்ன நியாயம்? அதுவும் உடனே வராது. எழுதி வாங்கணும். அப்பாவைப் பாத்தாலே பாவமா இருக்கு. இருக்கற நெலமைல அப்ளிகேஷன் போட, போஸ்டல் ஆர்டருக்கு இருபது ரூபா வேணும். பாரதி இருந்தாலாவது அவளிடம் கேட்கலாம். அவள் வரவும் ஒரு மாதம் ஆகும். சரி, இந்த வேலை வேண்டாம். அப்ளை பண்ண வேண்டாம். மற்றவர்கள் என் பேரைச் சொல்லிப் பிழைத்துப் போகட்டும்!'

அவன் தன் தாடியைத் தடவிக் கொண்டான். அந்தத் தாடியின் ஆயுள் எத்தனை நாட்கள்? ஒரு வாரமா? ஒரு மாதமா? இல்லை வருடமா?

வேலை கிடைக்கும் வரை தாடி. அதன் பின் முழுசாய் மொட்டை என்று நியமித்துக் கொண்டிருக்கிறான்.

தூரத்தில் தெரிந்த போஸ்ட்மேன் தற்காலிக நம்பிக்கை தந்தான்.

'You are provisionally selected for the post of sales officer in our...'

அவசர மனம் கற்பனைக்குப் பறந்தது. ஒரு சாதாரண சிறிய கவர் மட்டுமே வந்தது. நிச்சயம் வேலையில்லை. வேலைக்கான உத்தரவு பெரிய ஆபீஸ் கவரில்தான் வரும்.

கவரின் முகவரியில் முத்து முத்தான அட்ரஸ். இது பாரதி கையெழுத்து இல்ல! பாரதி... பாலைவன வாழ்வில் கொஞ்சம் வசந்தம் காட்டும் பாரதி. ஒரு மாத விடுமுறையில் ஊருக்குப் போயிருக்கும் பாரதி!

டியர்,

உங்க லெட்டர் பாத்து மனசிலே இடி அமீன் மாதிரி கனமான துக்கம். சிந்துபாத் கிழவன் மாதிரி இறங்க மாட்டேன்னு அடம்பிடிக்கும் துக்கம். இந்த துக்கம் பத்தாதுன்னு நீங்க தர சில 'ஷாக்ஸ்'. அட்வைஸ் பண்றதுக்கு வயசும் தகுதியும் எனக்கில்லை. ஆனா அட்லீஸ்ட் உங்க உடம்பையாவது பாத்துக்கக் கூடாதா? அதச் சொல்லக் கூடவா எனக்கு உரிமையில்லை. என் ஹெல்த்த உங்களுக்குத் தர முடிஞ்சா தேவலை.

எதுவும் பண்ண முடியாத நிலைல கனா கண்டு தொடர்ச்சியா சினிமா பாத்து, கண் முழிச்சி உடம்ப வேற கெடுத்துக்காதீங்க. எல்லாம் மனசே ராஜாதான். நா யாரு சொல்றதுக்கு? அந்த மாசம் முன்னாடி, எதிர்பாராம கெடச்ச ஒரு அரைப் பைத்திய ஸ்நேகிதி தானே! கேள்வி கேட்க ஆளில்லாத தில்! ஜமாய்ங்க சார் - உங்க உடம்பு போற போக்கப் பாத்தா ஒருநாள் எவாப்பொரேட் ஆகிடப் போறீங்க! சிறைன்னு காத்துல, கையால தடவிப் பார்க்க வேண்டிய நெலமை வரப் போறது.

ஓக்கே! வீட்ல எல்லாம் நலமா? விரை வில் வேலை கிடைக்க என்னைக் கூப்பிட நல்ல நாள் பாருங்க. ஆமா உங்களுக்குத் தான் கவிதை சொந்தமா?

நான் முயன்ற ஒரு கவிதை கீழே உதிர்கிறது. படித்து கமெண்ட் எழுதுங்க.

இது என்
இதய மரத்தின்
இலையுதிர் காலம்
ஏமாற்றக் காற்றை
எதிர்க்க வழுவின்றி,
எஞ்சிய கனவிலைகளும்
உதிர்த்து
விட்டன.
ஆத்ம அழுகை
வார்த்த நீரும்
வற்றி விட்டது.
நலிந்த நம்பிக்கைக்
கிளைகளில் -
தோல்விக் கழுகுகளின்
இளைப்பாறல்.
நினைவு வேர்களில் -
நிதர்சனக் கரையான்களின்
அரிப்பு.

கவிதை எப்படி? நம்புங்க சார்! சத்தியமா சொந்த சரக்கு. சரி, கடவுள் சந்தோஷ மழையை நம் மீது விரைவில் தெளிப் பாராக. மற்றவை கனவில்.

பிரியம்,
பாரதி.

அவன் மனம் கொஞ்சம் இளைப்பாறியது போல உணர்ந்தான். பாரதி நினைவில் நம்பிக்கை உயிர் பெற்றது. கடிதம் மனத்துக்குத் தெம்பு தந்தது. மனம் தெம்பானதும் உடம்பும் தெம்பானது. பாரதிக்காகவாவது ஒரு வேலையில் உடனடியாகச் சேரணும். யாரிடமாவது இருபது ரூபாய் கடன் வாங்கப் புறப்பட்டான். போஸ்டல் ஆர்டர் வாங்க வேண்டும்.

''அண்ணா! இந்த அஸைன்மெண்ட் பத்து பக்கம் காப்பி அடிக்கணும். கொஞ்சம் எழுதிக் கொடுத்துட்டுப் போயேன்'' - க.மு.கு.

''அவனே எழுதிக்கட்டும். எனக்கு இந்த டிராயிங் போட்டுக் குடு. கம்மாதானே இருக்கே!'' - இது க.கு.

''வேற வேலயில்ல! தினமும் தொண தொணன்னு...'' - அவன்.

''ஆமா... பெரிய கலெக்டர் வேல பாக்கிற! தெனமும் தூங்கித் தூங்கி முட்ட போடறது எங்களுக்குத் தெரியாதா?'' - க.மு.கு.

அவனுக்குச் சாட்டையடி மாதிரி இருந்தது. முளைக்க மூணு இலை விடாத விடலைகள்... என்ன கேள்வி கேட்கிறதுகள்?

வேலை.
வேலை.
வேலை.

அவன் அந்த இரவில்,
மாடியின் தனிமையில்,
நட்சத்திரத் தேடலில்,
பாரதியின் நினைவில்,
எதிர்காலக் கனவில் லயித்திருக்கையில்,
வானக் கூரையைப் பொத்துக் கொண்டு,
ஜகஜ் ஜோதியாய் மின்னிக் கொண்டு அந்த
வஸ்து வருவதைப் பார்த்தான்.

(தொடரும்)

வெடிகுண்டு சம்பவத்திற்குப் பிறகு, பம்பாய் நகர மக்கள் விழிப்புணர்வுடன் செயல்படத் தொடங்கி உள்ளனர். ஒரே கட்டடத்தில் (ப்ளாட்டுகளில்) வசிப்பவர்கள் சேர்ந்து உயர் ஜாதி நாய் வாங்க ஆரம்பித்து உள்ளனர். காவல் நாய்களின் மதிப்பு அதிகமாகி விட்டது. சுமார் ஆறு மாதங்களுக்கு முன்னால் விற்றதைவிட இப்பொழுது விலை இரண்டு மடங்காகி விட்டது! ஒரு அல்சேஷன் ரூ. 12000 க்கு விலை போகிறது!

தகவல் : போகஸ்ரீ ராஜ்.





# துணிச்சலுக்கு மறுபெயர்

'வெற்றி என்கிற விருட்சம், துணிச்சல் என்கிற விதைக்குள்தான் ஒளிந்து கொண்டிருக்கிறது' - இது ஒரு பிரசித்தி பெற்ற ஸ்பானிஷ் பழமொழி.

அசட்டுத் துணிச்சல், குருட்டு தைரியம் என்பதாக இதனைக் கொச்சைப்படுத்தும் மக்கள் நாட்டில் அநேகம் பேர் இருக்கிறார்கள். ஆனால், 'துணிச்சலு'க்கு 'நம்பிக்கையின் செயல் வடிவம்' என்று விளக்கமளிக்கிறவர்கள் இரண்டு இளைஞர்கள். தேவதாஸ் மற்றும் மாதவன். வயது 23.

மிக மிகச் சாதாரண குடும்பமே இவர்களுடையது. பெரிய பொருளாதாரப் பின்னணி ஒன்றும் இல்லை. ஆகவே அசாத்தியப் படிப்பும் இல்லை. இருவரும் பி.காம். பட்டத்தோடு நிறுத்திக் கொண்டார்கள். ஆயினும் ஒரு துணிச்சலான முயற்சியால், இன்று ஒரு கம்ப்யூட்டர் (ஸாஃப்ட்வேர்) நிறுவனத்தை, மைலாப்பூரில் தொடங்கி மிக வெற்றிகரமாக நடத்திக் கொண்டு இருக்கிறார்கள். சென்னை நகரின் பல பிரபல நிறுவனங்களின் DTP ஆர்டர் இவர்களிடம் வந்து குவிகிறது. பிரசித்தி பெற்ற நிறுவனத்தில் படித்தவர்களெல்லாம், எவ்வித பெயர் பிரசித்தமும் இல்லாத இவர்களது VANDOS கம்ப்யூட்டர்ஸில் பணிபுரிய விரும்பி வந்து காத்திருக்கிறார்கள். பத்தாயிரமும், இருபதாயிரமும் வாங்கி, கம்ப்யூட்டர் கல்வியை உன்னதமான பிஸினஸாக நடத்தும் நபர்களுக்கிடையே வெறும் ஆயிரம், இரண்டாயிரத்திற்குள் ஒரு டிப்ளமா கோர்ஸையே நடத்தி முடிக்கும் இவர்கள் வகுப்பில் சேர மாணவர்கள் முண்டியடிக்கிறார்கள்.

மிகக் குறுகிய காலத்தில் கம்ப்யூட்டர் துறையில் VANDOS இத்தனை பிரபலமடைய என்ன காரணம்? இத்தனை சிறிய வயதில் இப்படி ஒரு தொழில் தொடங்க தைரியம் எங்கிருந்து வந்தது?

தேவதாஸ் சொல்கிறார்: ''சின்ன வயதிலிருந்தே ஏதாவது புதுமையாகச் செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் உண்டு. பரீட்சைக்கு முந்தின தினம் சினிமா போவேன். 'என்ன பெட்டு, நீ அவுட்டு இந்த வாட்டி' என்று சவால் விடும் நண்பர்கள் முன்னே நிறைய மார்க்கோடு பாஸ் பண்ணிக் காட்டுவேன். 'எப்படிடா பாஸ் பண்ணே?' என்று அவர்கள் வியக்கும் போது இன்னும் விசித்திரமாக ஏதாவது செய்து காட்ட வேண்டும் என்று தோன்றும். எங்கள் குடும்பம் ரொம்ப சாதாரணமானதுதான். அப்பா, ஒரு பிரஸ்

நில், கவனி, வெற்றி கொள்!

ஸில் பைண்டராக இருந்து ரிடையரானவர். வீட்டில் அண்ணன்கள் இரண்டு பேர். இருவரும் வேலையில் இருக்கிறார்கள். நானும், படித்து முடித்து ஏதாவது இடத்தில் ஒரு குமாஸ்தாவாக உட்காரத்தான் என் வீட்டாருக்கு ஆசை. ஆனால் அது நமக்கு ஒத்து வராத சமாசாரம்! பத்தோடு பதினொன்றாக நாமும் இருப்பதற்காகவா பிறந்திருக்கிறோம் என்று அடிக்கடி தோன்றும். கம்ப்யூட்டர் கோர்ஸ் பிரைவேட்டாகப் படித்தேன். மாதவனும் என்னைப் போன்ற சுபாவம் உள்ளவன்தான்! இருவர் பார்வையும் ஒன்றாக இருந்ததால் கம்ப்யூட்டர் ஃபீல்டில் ஏதாவது சாதிக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டோம். கோர்ஸ் முடிந்ததும் மூன்று வருடங்கள் ஓரிடத்தில் DTP ஆப்பரேட்டராகப் பணிபுரிந்தோம். அவ்விடத்தில், எப்படியெல்லாம் ஒரு நிறுவனம் இயங்கக் கூடாது என்பதைத்தான் முதலில் கற்றுக் கொண்டோம்!'' என்று கூறிச் சிரிக்கிறார் தேவதாஸ்.

''வீட்டில் எப்படி சமாளித்தீர்கள்?''

''அடம்பிடித்துத்தான்!'' இருவரும் சிரிக்கிறார்கள்.

கடும் போட்டியுள்ள DTP துறையில் நுழைந்து, தேறுவது சாதாரண விஷயமல்ல. மேலும் வெறும் DTPயுடன் நின்று விடுவதும் இவர்களது எண்ணமல்ல. VANDOS நிறுவனம் தொடங்கி சில மாதங்களிலேயே அநேக மாணவர்களுக்குக் கம்ப்யூட்டர் பயிற்சி வகுப்பு நடத்துகிறார்கள். மேலும் ஐந்தாம் வகுப்பு வரை உள்ள பள்ளிகளில் ஒவ்வொரு 'யூனிட்' நிறுவி, மிகக் குறைந்த கட்டணத்தில் கம்ப்யூட்டர் பற்றிய அடிப்படைக் கல்வி வகுப்புகள் எடுக்கவிருக்கிறார்கள். ''விரைவில் ஸாஃப்ட்வேர் உற்பத்தியிலும் இறங்கப் போகிறோம்'' என்கிறார் மாதவன்.

''பொருளாதார ரீதியிலோ அல்லது வேறெந்த வகையிலுமே யாருடைய ஆதரவோ, அட்வைஸோ இல்லாமல் இப்படி திடுமென ஒரு சிரமமான தொழில் தொடங்கி நடத்துவது - ஆரம்பத்தில் உற்சாகமாக இருந்தாலும் போகப் போக சிரமங்கள் வரக்கூடுமே?''

# தன்னம்பிக்கை!

''அங்கே பணிபுரியும் போது வெறும் ஏஸி ரூம் வொர்க்கராக மட்டும் இல்லாமல் அடிக்கடி வெளியே சென்று கம்ப்யூட்டர் துறையைச் சேர்ந்தவர்களைச் சந்திப்போம். ஒரு ஸாஃப்ட்வேர் யூனிட் ஆரம்பிப்பதற்கான அடிப்படைத் தொழில்நுட்பத் தகுதிகளை வளர்த்துக் கொண்டோம். 'இனி முடியும்' என்ற நம்பிக்கை வந்த போது வேலையை விட்டு விட்டு முழு மூச்சாக இறங்கினோம்!''

''குறைந்தபட்சம் இரண்டு லட்சமாவது இல்லாமல் DTP யூனிட் ஆரம்பிப்பது சிரமமாயிற்றே!''

''பேங்க் ஆஃப் பரோடாவில் லோன் அப்ளை செய்தோம். 'இத்தனை சின்னப் பசங்க. எப்படிச் செய்வாங்களோ' என்று அவர்களுக்குத் தயக்கம், ஆரம்பத்தில். நான் சொன்னேன். 'சார், என்னிடம் டெக்னிகல் நாலெட்ஜ் இருக்கிறது. என் நண்பனுக்கு மார்க்கெட்டிங் அனுபவம் உண்டு. எல்லாவற்றுக்கும் மேல் நம்பிக்கை இருக்கிறது. சாதிக்கும் வெறி இருக்கிறது. நீங்கள் உதவித்தானாக வேண்டும்!' அவர் மெல்லப் புன்னகை செய்தார். அது எங்கள் நிறுவனத்தின் சூரிய வெளிச்சமாயிற்று!''

''சிரமமில்லாத தொழில்தான் எது? ஒவ்வொரு தொழிலிலும் அதனதன் அளவிலான பிரச்னைகள், சிரமங்கள் இருக்கத்தான் செய்யும். நாங்கள் துணிந்து விட்டோம். 'சின்னப் பசங்கள் என்ன பெரிதாகச் சாதித்து விட முடியும்?' என்று இப்போது சிலர் முணுமுணுக்கலாம். பார்த்துக் கொண்டே இருங்கள். 'ரோஜா' அரவிந்த சாமி மாதிரி க்ரிப்டாலஜி, அதற்கு மேலே வேறு எந்த டெக்னாலஜி இருந்தாலும் விட்டு வைக்கப் போவதில்லை! கம்ப்யூட்டர் துறையின் சகல சந்து பொந்துகளிலும் நுழைந்து, சாதனை படைத்தே தீருவோம்!'' என்று சிரித்துக் கொண்டே சொல்கிறார் தேவதாஸ்.

தன்னம்பிக்கை!

– பா.ரா.

படம் : கோபிநாத்

கடந்த மூன்று வருடங்களாக போலார் கன்ஸ்டிரக்‌ஷன்ஸ் சார்பில் கட்டி முடித்திருந்த கட்டடங்கள் எல்லாமே கட்டடக் கலைக்கு ஒரு எடுத்துக்காட்டாக இருப்பதை எவராலும் மறுக்க முடியாது என்ற உண்மை முதல் நாளைய விசாரணையில் தீர்மானமாகியது.

நித்யாவின் வேலைத் திறனில் எந்தவிதமான குறையும் இல்லை என்பதை அரசு சார்பில் நிபுணர்கள் நிரூபித்து விட்டார்கள்.

மதிய உணவுக்குப் பிறகு கூடிய கூட்டத்தில் கட்டட வேலையின் போது கைப்பற்றிய ஏழு மூட்டைகள் சிமென்டு குறித்து விசாரணை நடந்தது. அன்று காலையில் அதிகாரிகள் பரிசோதனையின் 'ரிப்போர்ட்' தயாராகி விட்டிருந்தது.

அதில் - ஏழு மூட்டைகளில், மூன்று மூட்டைகள் கலப்பட சிமென்டால் நிறைக்கப்பட்டிருந்ததாக நிரூபணமாயிற்று. அதன் பேரில் சொக்கலிங்கம் விசாரணைக்கு அழைக்கப்பட்டார்.

''உங்கள் தொழில்?''

சொக்கலிங்கம் நடுங்கும் குரலில் பதில் கூறினார்.

''நான் ஒரு சிமெண்ட் டீலருங்க.''

''மிஸ் நித்யாவின் கம்பெனியோட எவ்வளவு நாட்கள் பழக்கம்?''

''மூணு வருஷமா சப்ளை பண்ணறேனுங்க.''

''இவங்க கான்டிராக்டுகள் எல்லாவற்றுக்குமே நீங்கள்தான் இதுவரையில் சிமெண்ட் கொடுத்திருக்கீங்க, அப்படித்தானே?''

''ஆமாங்க.''

''இந்த செங்கல்பட்டு வேலை தொடங்கின பிற்பாடு எவ்வளவு மூட்டை கொடுத்திருக்கீங்க?''

''ஒரேயடியா, மொத்தமா மூட்டை அடுக்கற வழக்கம் இல்லைங்க. அம்பது, இருபத்தஞ்சி - அப்படீன்னு சொல்ப சொல்பமா தாங்க அனுப்பி வழக்கம். மழைக் காலத்துல மொத்தமா அனுப்பவும் முடியாதுங்க. சித்திரை, வைகாசின்னா, கூடவே அடுக்கற வழக்கம் உண்டுங்க.'' இதைக் கூறி முடிப்பதற்குள் அவனுக்கு வியர்வை ஆறாகப் பெருகியது.

அன்று காலை விகவம் காரில் வந்து, கீழே இறங்காமலேயே மிரட்டி விட்டுப் போனது நினைவுக்கு வந்தது.

''இதப் பாரு - நான் உனக்குப் பணம் கொடுத்ததாக விசாரணையின் போது நிஜத்தைச் சொல்லித் தப்பிக்கக்கலாம்னு நினைக்காதே. உன்னை யாரும் நம்ப மாட்டாங்க. என்னை யாராலையும் மாட்டி வைக்க முடியாது.






# பனிப்பாறை

## ஆபஸ்தம்பன்

நீயாகக் கலப்படம் பண்ணிட்டதா ஒத்துக்க. அப்புறம் நீ ஜெயிலுக்குப் போனியானா நான் ஜாமீனுக்கு ஏற்பாடு செய்யறேன். உன் பேரில இருக்கிற கேஸையும் எப்படியாச்சும் அமுக்கிடறேன். அது இல்லாம நீ என் பேரை இழுத்து கிழுத்து என்னை மாட்டி வைக்கப் பார்த்தே அப்பவும் ஜெயிலுக்குப் போகப் போறது நீதான். ஆனா ஒரே ஒரு வித்தியாசம். உன்னை ஜாமீன் கொடுத்து வெளியில எடுக்க யாரும் இருக்க மாட்டா. அடல்டரேஷன் கேஸல நீ ஒரு வருஷமோ, ஒன்றரை வருஷமோ உள்ளே இருக்க வேண்டியதுதான்.''

விசாரணை அதிகாரியின் குரல் அவனை இழுத்தது. ''கடைசி 'ஸ்டாக்கு' - அதாவது, இந்த மேல்தளம் இடிஞ்சு விழறதுக்கு முன்னாடி எத்தனை மூட்டை அனுப்பி வைச்சீங்க?''

''ஏழு மூட்டைங்க.''

அந்தப் பரந்த பெரிய அறையில் நிசப்தம் நிலவியது. அதிகாரியின் குரல் கடுமையாக ஒலித்தது.

''அந்த ஏழு மூட்டைகள்ல, மூணு மூட்டை பூராவும் கலப்பட சிமெண்ட். இதுக்கு என்ன சொல்றீங்க?''

நித்யா ஒருவித எதிர்பார்ப்புடன் நிமிர்ந்து உட்கார்ந்தாள். சயீத் அவளைப் பார்த்து நம்பிக்கையோடு சிரித்தான்.

''ம்... என்ன பதில் சொல்லப் போறீங்க?'' விசாரணை அதிகாரியின் குரல் பலமாக ஒலித்தது.

சொக்கலிங்கம் அதிகாரியைப் பார்த்து நடுங்கும் குரலில் கூறினான்

''ஆமாங்க. உண்மையை ஒத்துக்கறேன். கலப்படம் செஞ்சது நான்தானுங்க.''

அங்கு குழுமியிருந்த 'போலார் கன்ஸ்டிரக்ஷன்ஸ்' சம்பந்தப்பட்ட அனைவரின் மனங்களிலிருந்தும் இதுவரையில் இருந்த நம்பிக்கைகள், எதிர்பார்ப்புகள் - எல்லாம் சரிந்து விழுந்தன.

''இது போல எத்தனை இடங்களுக்குக் கலப்பட சிமெண்ட் சப்ளை செஞ்சிருக்கீங்க?''

''இங்கே மட்டும்தானுங்க.''

விகவத்தின் பெயர் வெளியே வரவில்லை.

''ஏம்பா, இந்தம்மா கம்பெனி மேல அப்படி என்ன தனிப்பட்ட விரோதம்?''

''..........''

''நீங்க செஞ்சது நம்பிக்கை துரோகம்னு உங்களுக்குத் தோணல்லை?''

இதற்கும் சொக்கலிங்கம் மௌனமாக நின்றான்.

''இரவு நேரத்துல இடிஞ்சு விழுந்த இதே மேல்தளம் பகல் நேரத்துல விழுந்திருந்தா எத்தனை பேரு உயிரிழந்திருப்பாங்க. இதையெல்லாம் யோசிக்கப் பார்த்தீங்களா?''

இதற்குப் பிறகு எந்தவிதமான கேள்விக்கும் சொக்கலிங்கத்திடமிருந்து பதில் வரவில்லை.

சொக்கலிங்கத்தின் மீது சாட்டப்பட்டிருந்த குற்றம் ''போலார் கன்ஸ்டிரக்ஷன்ஸ்'' மீதிருந்த தடையுத்தரவை நீக்கியது.

''ஸோ... மேடம், எப்படி முடிஞ்சு போச்சு பார்த்தீங்களா?''

சயீதும் நித்யாவும் வெளியே படிக்கட்டில் இறங்கிக் கொண்டிருந்தார்கள். அவன் குரலில் வெறுப்பும் கோபமும் மேலோங்கி நின்று கொண்டிருந்தன. நித்யா சலிப்புடன் கூறினாள் -

''சட்டத்தால கூட சில பேரை நெருங்க முடியறதில்லை, சயீத். இது ரொம்பவும் வேதனையான விஷயம். ஓகே சயீத்! நாளை வழக்கம் போல ஆபீஸ்ல பார்க்கலாம்.''

வெளியில் பிரசன்னா காருடன் காத்திருந்தான். ஏற்கெனவே காருக்குள் ஜகன்னாதன் உட்கார்ந்திருந்தார். கார் புறப்பட்டது.

ஜகன்னாதன் பேசினார்.

''அம்மா நித்யா, மனசு நிம்மதியா இருக்கும்மா. மேத்யு காலமே ஃபோன் பண்ணியிருந்தான். விசாரணை எப்படியும் நம்மை க்ளியர் பண்ணிடும்னு சொல்லிட்டு, நாளைக்கே வேலையை ஆரம்பிக்கச் சொன்னான்.''

நித்யா பேசாமலிருந்தாள்.

''என்னம்மா பேசாமலிருக்கே?''

''என்னத்தைப் பேசறது மாமா? கடைசி வரையிலும் அவன் பெயர் வெளியில வரவேயில்லை, பார்த்தேளா? இது என்ன அக்கிரமம் மாமா? சொக்கலிங்கம் இப்படிக் கோழையா மாறிடுவான்னு நான் எதிர்பார்க்கலை! நான் தோத்துப் போயிட்டேனே மாமா!''

''நித்யா! என்னம்மா நீ? இப்படிக் கலங்கலாமா? நீ எங்கேம்மா தோற்றுப் போனே? உன்னைத் தலையெடுக்க விடமாட்டேன்னு சவால் விட்ட அவன்தானேம்மா தோற்றுப் போய் நிக்கறான்! மிஸ்டர் ஃபகீர், உங்கம்மா - எல்லோருமே உங்கிட்டே இந்த விவகாரத்தை விட்டுடுன்னு கெஞ்சலை? இத்தனை பேரு உங்கிட்ட தூது வந்திருக்கான்னா - நீதானேம்மா ஜயிச்சதா அர்த்தம்?''

திருவல்லிக்கேணியின் சந்து பொந்துகளில் நுழைந்த கார், ஜகன்னாதனின் வீட்டின் முன் நின்றது.

**என்ன சினிமா தெரியுமா....?**
**36 - 37 - ஆம் பக்க விடை :**
**சினிமா : மகராசி**
**ஹீரோ : ரவிச்சந்திரன்**
**ஹீரோயின் : ஜெயலலிதா**

மருந்துத் தொழிற்சாலை வேலை துரிதமாக நடந்து கொண்டிருந்தது.

நித்யா வாதநாராயண மரத்தின் கீழ் நின்று கொண்டு வேலை நடப்பதையே பார்த்துக்கொண்டிருந்தாள். ஒன்றரை மாதத்தில் மேல்தளம் மீண்டும் கட்டப்பட்டது. பூச்சு வேலை துரிதமாக நடந்து கொண்டிருந்தது.

இந்த இரண்டரை மாத இடைவெளியில் இரண்டு பெரிய ஆர்டர்கள் அவளைத் தேடி வந்தன. பிரபல ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில் அவளைப் பற்றிய கட்டுரை வெளியாகியிருந்தது.

இத்தனை இருந்தும் மனத்தில் ஒரு வெறுமை; ஓர் இனம்புரியாத ஏக்கம்; தனிமை. ராதா ஒரு டிராவல் ஏஜென்ஸியில் வேலைக்கமர்ந்திருந்தாள். பிரசன்னாவின் சிபாரிசு மூலம் கிடைத்த வேலை. ராமன் மறுபடியும் அவளுடனேயே வேலைக்கு வந்து சேர்ந்திருந்தான். இந்தக் குறுகிய இடைவெளியில் அவன் மிகவும் மாறிப் போயிருந்தான். கட்டடக் கலை பற்றிய புத்தகங்களை நிறையவே படித்தான். பார்வதி துர்காவின் அருகிலேயே இருந்து கொண்டிருந்ததால் ராமன் நித்யா வீட்டுக்கு வருவது அதிகமாயிற்று. ராமனுக்கும் ராதாவுக்கும் இடையே இருந்த இடைவெளி கூடச் சிறிது சிறிதாகக் குறைந்து வருவது போல் தோன்றியது. அவர்கள் மீண்டும் இணைந்து வாழ வேண்டும் என விரும்பியது நித்யாவின் மனம்.

பகல் நேரமானாலும், மார்கழி மாதமானதால் வெயில் சுள்ளென்று உறைக்கவில்லை. விசுவாசத்துடன் வேலை செய்யும் ஊழியர்களைப் பார்த்தாள். மாரி, மாடசாமி, சின்னப்பன், அப்பாதுரை, மண்ணாங்கட்டி - பொன்னாத்தா, மங்கா - மனம் பிரேமையில், பரிவில் பொங்கி வழிந்தது. இவர்களுக்கெல்லாம் பொங்கலுக்கு நல்ல துணிமணிகள் எடுத்துக் கொடுக்க வேண்டும் என்று எண்ணினாள்.

மரக்கிளையிலாடிக் கொண்டிருந்த தூளியிலிருந்து சின்னக் குழந்தை ஒன்று வீறிட்டழுதது. தலையிலிருந்த கூடையைக் கீழே இறக்கி வைத்து விட்டு, சும்மாட்டைக் கீழே போட்டு விட்டு ஓடி வரும் இளம் தாயைப் பார்த்தாள். மனத்தின் மூலையில் எங்கோ ஒரு சிறிய ஏக்கம் வலியாக மாறியது.

உடனேயே மனம் மயிலையில் உள்ள அந்தச் சிறிய வீட்டை ஏனோ நினைத்தது.

பளிச்சென்ற குங்குமமும், இதழில் மாறாத சிரிப்பும், பாசத்தைத் தவிர வேறெதுவும் அறிந்திராத மன்னி; கள்ளம் கபடு இல்லாமல் கலகலவென்ற சிரிப்பும், 'வெடுக் வெடுக்'கென்ற பேச்சுமாக ஒட்டிக் கொள்ளும் ஹரிணி; சதா சர்வ நேரமும் மரக்கட்டையோடு தானும் ஒரு மரக்கட்டையாக இருந்து கொண்டிருக்கும் ஜீவன் - எல்லோ

### எங்கிருந்து வந்தது

# இவ்வளவு துணிச்சல்!...

**நா**ன் ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் ஏஜெண்டாகப் பணியாற்றி வருகிறேன்.

நான் சந்திக்கும் நபர்கள் பலர் என்னிடம் ஆங்கிலத்தில் பேசுவார்கள்.



அவர்கள் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேச எனக்கு மிகவும் பயமாக இருக்கும்.

இதனால் இன்ஷூரன்ஸ் திட்டத்தின் நன்மைகளை ஆங்கிலத்தில் விரிவாக எடுத்துரைக்க முடியாமல் திண்டாடினேன்.

"இந்த வேலை உனக்கு ஒத்து வராதுன்னு அப்பவே சொன்னேன் கேட்டியா?" என்று என் வீட்டிலுள்ளோர் முணுமுணுக்கத் துவங்கினார்கள்.

வேலையை விட்டுவிடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது, என்னுடன் பணியாற்றும் என் தோழி நிர்மலா விவேகானந்தா கல்வி நிலையத்தின் தபால் முறை ஆங்கிலப் பயிற்சி பற்றி கூறினாள்.

அவளது ஆலோசனைப்படி நான் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

பயிற்சி முறை மிகவும் எளிமையாக இருந்ததால், மாதா மாதம் அவர்கள் அனுப்பிய பாடங்களை ஆர்வமுடன் படித்து மூன்றே மாதங்களில் ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டேன்.

அடுத்த மூன்று மாதங்களில் ஸ்போக்கன் இங்கிலீஷ் பயிற்சி பெற்றேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது மிகச் சரளமாக ஆங்கிலத்தில் பேச முடிகிறது. இதனால், நான் ஈடுபட்டுள்ள பணியில் சிறப்பாகப் பணியாற்ற முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசினால் தவறாகப் பேசிவிடுவோமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டிருந்த நானா இவ்வளவு துணிச்சலாக பேசுகிறேன் என்று எனக்கே வியப்பாக இருக்கிறது.

எஸ். ஜான்சி

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில், தபால் மூலம் இப்பயிற்சியினை நீங்களும் மேற்கொள்ளலாம்.

'நேர்முகப் பயிற்சியும் உண்டு'

பெண்களுக்கு தனி வகுப்புகள்.

ஒரு போஸ்ட் கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி கீழ்க்காணும் முகவரிக்கு இன்றே அனுப்பி வையுங்கள். பயிற்சிபற்றிய விபரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கின்றோம்.



**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர்,
சென்னை-600 017.

ரும் மனதுக்குள் ஓடி மறைந்தார்கள். பாசம் நூலிழையாகப் பின்னிக் கொண்டிருக்கும் அந்தக் குடும்பத்திலிடையே தானும் ஒரு நிரந்தர பாத்திரமாகி விட மாட்டோமா என்ற தாகம் நெஞ்சுக்குள் ஊற்றெடுத்தது.

பிரசன்னாவைப் பார்த்து வெகுநாட்களாகி விட்டன. அலுவலகத்தில் அவன் லீவில் இருப்பதாகக் கூறினார்கள். மீண்டும் அவன் வீட்டுக்குச் செல்ல முடியாமல் ஏதோ ஒருவிதத் தயக்கம் அவளைத் தடுத்தது. வாழ்க்கையில் அர்த்தமே இல்லையோ, என்று ஓரோர் கணம் நினைக்கத் தோன்றியது. வாழ்வின் முழுமையை எப்போது தான் அடைகிறது? சோர்வு உடலையும் உள்ளத்தையும் ஆட்கொண்டது.

எதிரே ஜகன்னாதன் வந்து கொண்டிருந்தார்.

''காலமே வர முடியல்லை நித்யா. கோதைக்கு வலியெடுத்து ஆசுபத்திரியில் சேர்க்க வேண்டியதாப் போச்சு. பதினோரு மணிக்குப் பிள்ளை பொறந்திருக்கு. மூல நட்சத்திரம். ஆண் மூலம் அரசாளும் என்பார்கள்! இந்தாம்மா சாக்லேட்டு. நீ இனிமேல் வீட்டுக்குப் போம்மா. மார்கழி மாசம் கருக்க இருட்ட ஆரம்பிச்சுடும். நான் பார்த்துக்கறேன்.''

ஒருகணம் நெகிழ்ந்து போய் நின்றாள்.

''என்ன மாமா இது? நீங்க இன்னைக்கு லீவு போட்டுட்டு நாளைக்கு வந்திருக்கலாமே?''

''அதனால் என்னம்மா? எனக்கு இனிமேல் அங்கே என்ன வேலை?''

இவருக்குத்தான் எத்தனை அன்பு! இதெல்லாம் ஈடுகட்ட முடியாத வகை அன்பு.

**ப**ஸ்ஸில் ஏறி வீடு வந்து சேருவதற்குள் இருட்டத் தொடங்கி விட்டிருந்தது. வாசற்கதவு திறந்திருந்தது.

பிரசன்னா!

திடீரென்று அடி வயிற்றில் இனம்புரியாத இன்ப உணர்வு அவளைச் சிலிர்க்க வைத்தது.

ராமனும் வந்திருந்தான்.

''அக்கா - நீ வர்றதுக்காகத்தான் காத்துண்டிருந்தோம்.''

- காப்பியுடன் வந்த ராதா சிரித்துக் கொண்டே அவளிடம் கோப்பையை நீட்டினாள்.

''மேக்ஸ் முல்லர் பவன்ல ஒரு ஓவியக் கண்காட்சி. இவரும் நானுமா...'' ராதா தடுமாறினாள்.

''ஓ! எத்தனை மகிழ்ச்சியா இருக்கு ராது. நீங்க ரெண்டு பேரும் அப்பவே போயிருக்கலாமே!''

''நானும், பிரசன்னாவும் அதைத்தான் சொன்னோம். ராதாதான் நீ வந்தப்புறம் போகலாம்னு பிடிவாதம் பிடிச்சா'' என்றான் ராமன்.

அவர்களிருவரும் சேர்ந்து போனது மனத்துக்குக் குளிர்ச்சியைக் கொடுத்தது.

''ரொம்ப நேரமாக் காத்திண்டிருக்கேளா?'' மெல்லிய குரலில் கேட்டாள் பிரசன்னாவிடம்.

''பத்து மணியாயிருந்தாலும் காத்திண்டிருந்திருப்பேன் நித்யா. நாளைக்கு ஒரு சின்ன பூஜை.''

அவள் கேள்விக்குறியுடன் அவனைப் பார்த்தாள்.

''மாடியில ரெண்டு ரூம், ஒரு பாத், ஒரு நீளமான 'ஸிட் அவுட்' கட்டியிருக்கோம். கீழேயும் கொஞ்சம் ரீ மாடலிங்...''

அவள் ஆச்சரியத்துடன்...

''கட்டினதெல்லாம்?'' என்றாள்.

''எல்லாம் ஜகன்னாதன் சாரும், சயீதுமாச் சேர்ந்து பண்ணினது.''

அவள் பேசவில்லை. மனசு எதற்கோ அலைபாய்ந்தது.

''மன்னி உன்னை எட்டு மணிக்கு ஃபோன் பண்ணி அழைக்கணும்னு சொல்லிண்டிருந்தா. எனக்கு ஒரு அல்ப ஆசை - மன்னி கூப்பிடறதுக்கு முன்னாலேயே உன்னை நேரில் வந்து கூப்பிடணும்னு'' அவள் பேசவில்லை.

கப்பல் ஒன்றின் ஹாரன் ஒலி துல்லியமாகக் கேட்டது.

அதைத் தொடர்ந்து மகாலக்ஷ்மி கோயிலின் மணியோசை இனிமையாகக் காற்றில் மிதந்து வந்தது.

அவன் தனது கையை நீட்டி அவள் புறங்கை மீது வைத்தான்.

''நான் ரொம்பவும் பேராசை பிடிச்சவன் நித்யா. நாளைக்கு மட்டுமே உன்னைக் கூப்பிட வரல்லை. என்றைக்கும் - ஆயுசு பூராவும் என் கூட வருவியான்னு கேக்கத்தான் வந்தேன்.''

அவளால் பேச முடியவில்லை. மெல்ல அவன் கையைப் பற்றி இழுத்து நடுங்கும் குரலில் 'தேங்க்ஸ்' என்றவாறே குனிந்து அவன் உள்ளங்கையில் தன் இதழ்களைப் பதித்தாள்.

(முற்றும்)





## ''ஷ்ஷ்ஷ்... யூனிட் '64 வாங்க இதுவே சிறந்த சமயம்''. பிரதி யூனிட் ரூ. 16.00 மட்டுமே. '93 ஜூலை 31 வரை.

யூனிட்டுகளில் முதலீடு செய்தவர்களுக்கு மிக அதிக பிரதிபலன்கள் கிடைத்து வருகிறது.

**அதிக டிவிடெண்ட்**

கடந்த 14 வருடங்களாக யூனிட்டுகளின் மீது டிவிடெண்ட் அதிகரித்து வருகிறது. கடந்த வருட டிவிடெண்ட் 26% '92 ஜூலையில் முதலீடு செய்தோருக்கு கிடைத்த லாபம் 17.5%.

**மூலதன அபிவிருத்தி**

தவிர, யூனிட் '64 பிரத்யேகமாக மத்திம மற்றும் நீண்டகால முதலீட்டாளர்களுக்கு மூலதன அபிவிருத்தியையும் அளிக்கிறது. உதாரணத்திற்கு ஜூலை '90ல் நீங்கள் யூனிட்டுகள் வாங்கியிருந்தால் அவை இப்போது 9%ஐவிட அதிகம் விருத்தியாயிருக்கும்.

**பாதுகாப்பு, எளிதில் ரொக்கம்.**

யூனிட்டுகள் எப்பொழுதும் பாதுகாப்பிற்கு ஏற்றவை. உங்களுக்கு அவசரமாக பணம் தேவைப் பட்டால் எளிதில் ரொக்கமாக்கும் வசதியின் அனுகூலமும் யூனிட்டுகளுக்கு உண்டு.

**விசேஷ லாபங்கள்.**

கூடவே, யூனிட் '64 பங்குதாரர்களுக்கு இன்னும் அதிக விசேஷ லாபங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

**26%**
**டிவிடெண்ட்**
**1992-93க்கு**

1990ல் யூஎஸ் 2000தில் முதலீடு செய்யும் பிரத்யேக வாய்ப்பு. அதிகம் வளரும் இத்திட்டத்தில் முதலீடு 100% அதிகரித்துள்ளது.

1991-ல் யூஎஸ் 5000. இத்திட்டத்தில் முதலீடு 54% அதிகரித்துள்ளது.

1992ல் விசேஷ தள்ளுபடி விலையில் அதிகம் யூனிட்டுகள் வாங்க பிரஃபரன்ஷியல் அளிப்பு.

இந்த வருடமோ, 2:5 என்ற விகிதத்தில் கவர்ச்சிகர முன்னுரிமை அளிப்பு. யூனிட் பங்குதாரர்கள் ('93 ஜூன் 30 அன்று உள்ள) ஜூலை விலையைவிட 20% குறைந்த விலையில் யூனிட்டுகள் வாங்கலாம். அதாவது ரூ. 16.00க்கு பதிலாக 12.80 என்ற விலையில்.

இவை எல்லாவற்றையும் பார்க்கும்போது நீங்களும் யூனிட்டுகளில் முதலீடு செய்திருக்கலாம் (அல்லது முதலீட்டை அதிகரித்திருக்கலாம்) என்று தோன்றினால் சீக்கிரம் செயல்படுங்கள்.

இப்பொழுது நீங்கள் வருடத்தின் மிகக் குறைந்த விலையில் யூனிட்டுகள் வாங்கலாம் ரூ. 16.00 பிரதியூனிட். '93 ஜூலை 31 வரை.

விண்ணப்ப பாரங்களுக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் காரியாலயம், முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டுகளையோ அணுகவும்.

**தற்போதுள்ள பங்குதாரர்களுக்கு விசேஷ முன்னுரிமை அளிப்பு**

### யூனிட் '64 பங்குதாரர்கள் வெற்றியாளர்கள்.

### நீங்கள்?



## யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

உங்கள் மேலான எதிர்காலத்திற்கென

Sista's UTI 34 93 TMA

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 210399 • சென்னை. போன்: 517101, 517190
• மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 32619

# நீங்கள் கேட்டவை - தராசு

● ஆர். கணேசன், மதுரை.

? முன்பு சிதம்பரத்தை ராஜினாமா செய்யச் சொன்ன பிரதமர் தமக்கு மட்டும் ஒரு புது நியாயம் கற்பிக்கிறாரே?

! சிதம்பரம் தாமாகவேதான் முன்வந்து ராஜினாமா செய்தார். அந்த அளவுக்குப் பெருந்தன்மை பிரதமருக்கு இல்லை. ஆக, நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சிதான் ஒரு நல்ல முடிவுக்கு வர வேண்டும்.

● எஸ். பாகீரதி, செகந்திராபாத்.

? ஒரு நல்ல குடிமகனின் இப்போதைய கடமை என்ன?

! வரப் போகும் தேர்தலில் கண்மூடித்தனமாக வோட்டை விரயம் செய்யாமல் யாருக்கு வோட்டு என்று அறிவு பூர்வமாகச் சிந்தித்துச் செயல்படுவதுதான்.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? வை.கோ., கலைஞருக்கு ரத்தத்தால் கடிதம் எழுதியிருப்பது பற்றி?

! ''ரத்தமா? கையெழுத்தா? நானா?'' என்று கேட்டு வை.கோ. மறுத்திருக்கிறாரே!

● டி. பாபு மல்லிகா, பெரியதாழையாத்தம்.

? தற்போது எந்த நடிகர் நடிகையாவது



# முதலில் கலையப் போவது மத்திய அரசா? மாநில அரசா?

● பெருந்தன்மை



● ரத்தமா? நானா?



● புதிய கட்சி



● கண் பனிக்க...



இங்கு முதல் அமைச்சர் ஆவதற்கு வாய்ப்பு உண்டா?

! நீங்கள் கேட்பதைப் பார்த்தால் எந்த அரசியல் தலைவரும் அந்தப் பதவிக்கு இங்கு வர முடியாது போலிருக்கே!

● ஜி. ராஜசேகர், வலங்கைமான்.

? நான் டாக்டர் பட்டம் பெற என்ன செய்ய வேண்டும்?

! ரொம்ப ஈஸி. முதலமைச்சர் ஆகி விட்டால் போதும்!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? அரசியலில் சிவாஜி தமது பெயரை இப்படி கெடுத்துக் கொண்டு விட்டாரே?

! இருக்கின்ற நல்ல பெயரும் கெட்டுப் போகாமல் இருக்கத்தான் ராஜினாமா செய்த தாக அவர் சொல்கிறாரே!

● ஈ.ஏ. அப்துல்நஸீர், வலங்கைமான்.

? இளையராஜாவின் தற்போதைய சாதனை பற்றி?

! பக்கிங்ஹாம் அரண்மனையில் பண்ணை புரத்துப்பாட்டு! ராயல் ஃபில்ஹார் மோனிக் ஆர்கெஸ்ட்ரா 77 இசைக் கலைஞர்களைக் கொண்டது. இவர்கள் வாசிக்க நூதன இசை அமைத்துத் தந்துள்ள முதல் ஆசியர், முதல் இந்தியர், முதல் தமிழர் இளையராஜா. பிரஸ் மீட்டில், ''ஸிம்ஃபொனி என்பது எத்தனை கஷ்டமான இசை வடிவம்; அதை ஒரே மாதத்தில் எழுதி முடித்தது எப்பேர்ப்பட்ட அசுர சாதனை'' என்று விளக்கியவர், கமல். ''எனக்குக் கிடைத்த இந்த அங்கீகாரத்தை உங்களிடம் சொல்லி சந்தோஷப் படாமல் வேறு யாரிடம் போய்ச் சொல்லுவேன்'' என்று இளையராஜா கண் பனிக்கத் தேம்பியது உருக்கம்.

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

*? தேர்தல் வந்தால் யாருக்கு மக்கள் பெரும்பான்மை அளிப்பார்கள்?*

*! இன்றையச் சூழலை வைத்துப் பார்க்கும் போது ராஜீவுக்கு! (ராஜீவ் = தாமரை)*

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

*? "மெடிகல், இன்ஜினீரிங் சுயநிதி கல்லூரிகள் மாதிரி, சுயநிதி கோர்ட்டுகள் தொடங்கவும் அரசு அனுமதி கொடுக்கலாம்" என பி.எச். பாண்டியன் கூறியுள்ளாரே?*

*! ஆமாமாம், மத்திய மாநில அரசாங்கங்களே சுயநிதி அரசுகளாக மாறி விட்ட நிலையில், அதை மட்டும் விட்டுவைப்பானேன் என்று அவருக்குத் தோன்றியிருந்தால் தப்பில்லை!*

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? "என்னைப் பொறுத்தவரை முதலமைச்சர் பதவி கால் கண்டுவிரல் நகத்துக்குச் சமம்' என்று கவர்னர் சென்னா ரெட்டி கூறுகிறாரே?*

*! கண்டு விரல் நகத்தில் அடிபட்டால் உயிர் போகிற மாதிரி வலிக்கும்.*

● மகேஷ், மதுரை.

*? நாஞ்சிலார் மன்னிப்புக் கேட்டும் தி.மு.க. முடிவு மாறவில்லையே?*

*! கட்டுண்டார், பொறுத்திருப்பார், காலம் மாறும்.*

● கே. ஆர். அசோகன், கிட்டம்பட்டி.

*? தி.மு.க.வில் வை.கோவின் பலம் எப்படி?*

*! போயே போச்சு, போயிந்தே, இட்ஸ் கான்!*

❖ விட்டு வைப்பானேன்!



❖ காலம் மாறும்



❖ கடவுளே, காப்பாற்று!



❖ பிரச்னைக்குத் தீர்வு



❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
பி. ஜெயப்பிரகாஷ்,
110, ஓ.எஸ்.பி. நகர்,
வேட்டைக்காரன்புதூர்,
கோவை (மாவ) - 642 129.

● ரா. ரவி, ஒட்டன்சத்திரம்.

*? முதலில் கலையப் போவது மத்திய அரசா? மாநில அரசா?*

*! ஜூலை 26 வரை பொறுத்திருங்கள்.*

● ஆர். கார்த்திகேயன், நாட்டரசன் கோட்டை.

*? "எனக்கு 'மூட்' வந்தால் தனியாக ஒரு கட்சி ஆரம்பிப்பேன்" என்று விசு கூறியிருக்கிறாரே?*

*! கடவுளே! அந்த மூட் வராமல் அவரையும் அரசியலையும் காப்பாற்று!*

● ஆர். உமா, திருச்சி.

*? "தமிழ்நாட்டின் குடிநீர் பிரச்னையைக் காங்கிரஸ்காரர்களால் தீர்க்க முடியும்" என்கிறாரே ரங்கராஜன் குமாரமங்கலம்?*

*! பந்த் அறிவிப்பதன் மூலம் நிச்சயம் அந்தப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. கதவடைப்புக்கு ஆதரவு எந்த அளவுக்குக் கிடைக்கும் என்று சரியாகக் கணிக்காமல் பந்த் தோல்வி அடைவதன் மூலம் குடிநீர்ப் பிரச்னை தீராது. தோல்வியைப் பெருந்தன்மையுடன் ஏற்காமல் "அரசின் அடக்குமுறை" என்று கூச்சல் போட்டு, ஆளுனரிடம் புகார் கொடுப்பதன் மூலமும் நிச்சயம் குடிநீர்ப் பிரச்னை தீராது.*

● ரம்யா, சென்னை - 91.

*? மிகுந்த சமூகப் பிரக்ஞையுடன் எழுதும் எழுத்தாளர்கள் ஏன் அரசியலில் பிரவேசம் செய்யக் கூடாது?*

*! அரசியலில் புகுந்து விட்டால் அப்புறம் சமூகப் பிரக்ஞையை இழந்து விட வேண்டியிருக்குமே, அதனால்தான்!*

● பி. ஜெயப்பிரகாஷ், வேட்டைக்காரன் புதூர். ❑

*? கால் மணி நேரம் டீவியில் நீங்கள் தோன்றி எது வேண்டுமானாலும் பேசலாம் என்று அனுமதி கிடைத்தால் என்ன பேசுவீர்கள்?*

*! டீவியினால் விளையும் தீமைகளைப் பற்றித்தான்!*

● ஆர். பாலு, திருச்சி.

*? நடிகர் சிவாஜி கணேசன் புதிய கட்சி ஆரம்பிக்கப் போகிறாராமே?*

*! ஏற்கெனவே கையைச் சுட்டுக் கொண்ட அனுபவத்துக்குப் பிறகுமா?*

வரும் ஆடிப்பெருக்கு (2.8.93) அன்று எங்கள்
CUMULATIVE DEPOSITல் முதலீடு செய்து
3 ஆண்டுகளில் இருமடங்காக பெறுங்கள்




- LEVER FILE
- TAG FILE
- CLIP FILE
- FIBRE BOARD FILE
- WRITING PAD

தங்கள் முன்னேற்றத்தில் உற்ற தோழன்... 1947 முதல்

## FIXED DEPOSITS ALSO ACCEPTED AT

# 24% P.A.

| | | |
|---|---|---|
| குறைந்தபட்ச டெப்பாசிட் | : | ரூ.3000/- |
| குறைந்தபட்ச காலம் | : | 12 மாதங்கள் |
| வட்டி அனுப்புதல் | : | மாதம்தோறும் |

**MUTHUVEL INDUSTRIES,** MFRS. OF COCK BRAND OFFICE FILES,
Angappa Chettiar Industrial Complex, 20-A, Round Road,
Post Box No.32, DINDIGUL - 624 001. TAMIL NADU.
© Office: 5260 & 7637, Residence: 5643 & 3726 Grams: COCKFILE

# சக்கரவர்த்தித் திருமகன்

## 46. கம்ப சித்திரம்

தோட்டத்தில் மேய வந்த ஒரு கழுதையைத் தடியாலடித்து ஓட்டுவது போல் சூர்ப்பணகையைத் துரத்தி விட்டார்கள். வால்மீகி இந்த நிகழ்ச்சியை வெகு சுருக்கமாகச் சிக்கல் ஒன்றுமின்றி எழுதி விட்டார்.

கம்பர் இந்தச் சங்கதியை அவ்வளவு சுலபமாக முடித்து விடவில்லை. சூர்ப்பணகை பட்ட பாட்டை ஒரு பெரிய தனி நாடகமாக்கி அதில் எல்லாவித ரஸங்களையும் தீட்டி விட்டிருக்கிறார். சூர்ப்பணகைப் படலம் கம்ப ராமாயணத்துக்குள் ஒரு தலைசிறந்த படலம்; அதன் அலங்கார அழகுகளை நண்பர்களுக்கு எடுத்துக் காட்டுவதில் டி.கே.சி. அவர்கள் தெவிட்டு அடைய மாட்டார்.

ஆற்றங்கரைப் படுகையில் ராமன் உட்கார்ந்து கொண்டு அங்கு ஒரு அன்னம் மெள்ள நடந்து கொண்டிருந்ததைப் பார்த்து விட்டுச் சீதையைப் பார்த்தான். அவளும் நடந்து கொண்டிருந்தாள். இரண்டு நடையும் ஒன்று போலிருந்ததைக் கண்டு ஒரு புது மகிழ்ச்சி உண்டாகி, அந்த மகிழ்ச்சி ராமன் முகத்தில் ஒரு புன்முறுவலாயிற்று. அதற்குப் போட்டியாக தேவியும் அவ்விடம் கொஞ்ச தூரத்தில் ஒரு யானை வந்து தண்ணீர் குடித்து விட்டுத் திரும்பிப் போய்க் கொண்டிருந்ததை நோக்கி அவளும் தன் கணவன் அழகை, நினைத்துப் புன்னகை பூத்தாள். இவ்வாறு பஞ்சவடி ஆற்றங்கரையில் பகவான் கண்ணன் சொன்னபடி ''தருமத்துக்கு விரோதப்படாத துறையில்'' காதல் உணர்ச்சி சென்று கொண்டிருந்த சமயத்தில் விதியின் சூழ்ச்சியானது சூர்ப்பணகையை, தன் பாட்டுக்குக் காட்டில் திரிந்து கொண்டிருப்பவளை அதை விட்டு, ராமனண்டை போகச் செய்தது.

''வைகலும் தமியள் அவ்
 வனத்துள் வைகுவாள்,
நொய்தின்இவ் வுலகெலாம்
 நுழையும் நோன்மையள்,
வெய்யதோர் காரணம்
 மேவி உண்மையின்
எய்தினள் இராகவன்
 இருந்த சூழல்வாய்.''

அரக்கர்களைத் தீர்ப்பதற் கென்றே பாற்கடலை விட்டுத் தசரதன் மகனாக வந்த ஆண்டவனைக் கண்டவுடன், சூர்ப்பணகை, ''இந்த அழகிய உருவம் மன்மதனா, இந்திரனா, மகாதேவனா, மகா விஷ்ணுவா!'' என்று யோசித்தாள். ''மன்மதனுக்கு உடலில்லையே, இந்திரனுக்கு ஆயிரம் கண்களாயிற்றே, மகாதேவனுக்கு நெற்றியில் ஒரு கண்ணுண்டே, இவனுக்குக் கைகள் நான்கு இல்லையே, இவன் இந்திரனுமல்ல, பரமசிவனுமல்ல, விஷ்ணுவுமல்ல, ஒருவேளை பரமசிவனால் சாம்பலாகிய மன்மதன்தான் தவம் செய்து மறுபடி ஒரு உடல் சம்பாதித்திருக்கிறானோ'' என்று ஆலோசித்தாள்.

''சுற்றுவஞ் சடையவன்
 கண்ணிற் காய்தலால்
இற்றவன் அன்றுதொட்(டு)
 இன்று காறுந்தான்
நற்றவம் இயற்றிஅவ்
 அனங்கன் நல்உருப்
பெற்றன னாம்எனப்
 பெயர்த்தும் எண்ணுவாள்.''

''இந்த அழகான புருஷன் ஏன் வீணாகத் தன் உடம்பை வருத்திக் கொண்டு விரதம் நோற்கின்றான்? செந்தாமரை போன்ற கண்களையுடைய இவன் ஏன் தவம் செய்து கொண்டு காலத்தை வீணாக்குகிறான்?'' - இப்படியெல்லாம் எண்ணிக் கொண்டு ராமனைப் பார்த்து நின்றாள். கண்களை அதை விட்டு வேறு

ராஜாஜி

பொருளின் மேல் செலுத்த முடியாமல் நின்றாள். என்ன செய்வது என்று யோசித்தாள். ''இவன் என் உருவத்தைக் கண்டு என்னை வெறுப்பான். நான் மாறு வேஷம் போட்டுக் கொண்டு இவனண்டை போக வேண்டும்'' என்று எண்ணினாள். மாயத்தால் தன்னுடைய அரக்கி உருவத்தை மறைத்துக் கொண்டு மிகச் சுந்தர வடிவம் எடுத்துக் கொண்டாள். ''குயில் தொடர் குதலை'' மொழியும் ''கொவ்வைச் செய்ய'' வாயும் ''மயில் தொடர் இயலி''யாய்த் தன்னை மாற்றிக் கொண்டு,

"திங்களின் சிறந்தொளிர்
முகத்தள் செவ்வியள்,
பொங்கொளி விசும்பினில்
பொலியத் தோன்றினாள்."

தேவலோகத்துக் கற்பக மரத்தில் ஏறி வளர்ந்த ஒரு பொன் கொடியைப் போன்ற மேனியும் காம வெறியூட்டும் இதழ்களும் முத்துக்களைப் போன்ற பற்களும் மான் விழியும் கொண்டு ''மயில் வந்ததென'' வந்தாள். நூபுரமும் மேகலையும் செய்த ஒலியானது ஒரு பெண் வருவதை ராஜகுமாரனுக்குத் தெரிவித்தது.

ராமன் பார்த்தான். எல்லை கடந்த அழகைப் பெற்ற ஒரு ஸ்திரீ வந்து நிற்பதைக் கண்டான். ராமனுடைய பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள். பிறகு சிறிது நாணத்தோடு எட்டி நின்றாள்.

''உம் வரவு நல்வரவு ஆகுக. வெகு தூரத்திலிருந்து வந்திருக்க வேண்டும். உம் ஊர் எது? உம் பெயர் என்ன? உம் உறவினர் யார்?'' என்று ராமன் கேட்டான்.

''நான் பிரும்மாவின் பேரனுக்குப் புதல்வி. குபேரனுடைய தங்கை. வெள்ளி மலையை எடுத்த ராவண மன்னனுக்கு உடன் பிறந்தவள். காமவல்லி என்ற கன்னி'' என்று கூறினாள்.

''என்ன காரியத்தை உத்தேசித்து இங்கே வந்தது?'' என்றான்.

''பெண்கள் தங்களுடைய கஷ்டத்தைச் சொல்லிக் கொள்வதற்கில்லை. ஆயினும் நான் சொல்லுகிறேன். காம தேவன் என் உள்ளத்தைத் துன்புறுத்துகிறான். நீ என்னைக் காக்க வேண்டும்'' என்றாள்.

ராமனுக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லை. அவள் மேலும் சொல்லிக் கொண்டு போனாள் :

''என்னைக் கந்தர்வ விவாக முறையில் மனைவியாக்கிக் கொள்வாய். அந்த முறை 'காதலில் கலந்த சிந்தை கொண்ட மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மறைகளே வகுத்துக் கூறும்.' இது நடந்து விட்டால் எனக்குச் சந்தோஷம் தருவதுடன் என் அண்ணன் ராவணனுக்கும் உனக்கும் நல்ல சிநேகம் ஏற்பட்டுப் போகும். இந்த வனத்தில் நீ தனியாக இருக்கிறாய். ராக்ஷஸர்கள் உன்னைத் துன்புறுத்துவார்கள். நீ முனிவர் கூட்டத்தில் ஒருவனாக இருப்பதால் காரணமின்றியே அவர்கள் உன்னைத் தொந்தரவு செய்வார்கள். நீ என்னை உடனே மணந்து விட்டால் அந்த அபாயம் நீங்கும். அது மாத்திரம் அல்ல. அதன் பயனாக அந்தப் பலவான்கள் உன்னுடைய வேலைகளையெல்லாம் செய்யத் தயாராக இருப்பார்கள். இதை யோசிப்பாயாக'' என்று நீதி சாஸ்திரத்தை யொட்டிச் சொன்னாள் சூர்ப்பணகை.

ராமன் பெருஞ் சிரிப்புச் சிரித்தான். ''அரக்கர்களுடைய கருணையையும் ஒரு அழகிய புது மனைவியையும் நான் பெற்று விடுவேன் அல்லவா? உன்னோடு சுகமாக எங்கு வேண்டுமானாலும் உல்லாசமாகத் திரியும் சௌகரியத்தையும் பெறுவேனல்லவா? மிகச் சரி! அயோத்தியை விட்டு நீங்கி நான் செய்த தவம் இன்று நல்ல பயன் தந்தே விட்டது!'' என்று சொல்லித் தன் வெண்மையான பற்கள் விளங்க வாய் திறந்து சிரித்தான் ராமன்.

ஜானகி இந்தச் சமயத்தில் செடிகளுக்கிடையில் வந்து கொண்டிருந்தாள்.

லக்ஷ்மி தேவியே இந்தப் பூமியில் அவதரித்த பூங்கொடி போன்ற சீதை ராமனிருந்த இடம் வந்து கொண்டிருந்ததை சூர்ப்பணகை பார்த்தாள். சீதையின் அழகைக் கண்டு வியந்தாள்.

காமத்தால் பீடிக்கப்பட்ட அரக்கிக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

''இதோ வருகிறாளே இந்தப் பெண், இவள் ஒரு மாயவித்தை செய்யும் ராக்ஷஸ ஸ்திரீ. இவள் உன்னை ஏமாற்றுவாள். ஜாக்கிரதை! இவள் உருவம் இதுவன்று. இவள் பச்சை மாமிசம் தின்னும் அரக்கி. இவளைத் தூரத் தள்ளு'' என்றாள்.

ராமன் மறுபடி சிரித்தான். ''நீ




எவ்வளவு அறிவாளி! இவளை நீ யல்லவா சரியாகக் கண்டு கொண்டாய்'' என்றான்.

இதற்குள் சீதை ராமன் பக்கத்தில் வந்து விட்டாள். சூர்ப்பனகைக்கு ராமனுடைய பரிகாசம் தெரியவில்லை. அவளுடைய காம வேதனை அவளுடைய மூளையை முற்றிலும் அழித்து விட்டது. சீதையைப் பார்த்துச் சீறினாள்:

''நீ ஏன் இந்த வீரனண்டை வருகிறாய், அரக்கி?''

**நீயிடை வந்ததென்னை,**
**திருதர்தம் பாவை!**

என்று கோபத்தோடு, ''தூரப் போ!'' என்று அதட்டிச் சொன்னாள்.

சீதை இதுவென்ன விபரீதம் என்று ஒன்றும் விளங்காமல் நடுங்கி, மேகத்தை மின்னற் கொடி தழுவுவது போல் சக்கரவர்த்தித் திருமகனுடைய தோளைத் தழுவிக் கொண்டாள்.

விளையாடியது இனி போதும் என்று சூர்ப்பனகையைப் பார்த்து, ''நங்காய், இனி நிறுத்து. என் தம்பி இருக்கிறான். உன் விஷயம் அவனுக்குத் தெரிந்து விட்டால் அவன் கோபித்துக் கொள்வான். அவன் பெருங் கோபக்காரன். என்ன நடக்குமோ எனக்குத் தெரியாது. சீக்கிரம் நீ வந்த வழியே திரும்பிப் போய்விடு!'' என்றான்.

இதைச் சொல்லி ராமனும் சீதையும் பர்ணசாலைக்குள் போய் விட்டார்கள்.

இதன் பின் அரக்கிக்குக் காதல் வெறி அதிகமாகி விட்டது. இரவு எப்படியோ எங்கேயோ கழிக்கிறாள். விடிந்தவுடன் யோசனை செய்கிறாள்.

''இவனை அடையா விட்டால் என் உயிர் போகும் போலிருக்கிறது. இந்தப் பெண் ஒருத்தி இருக்கும் வரையில் இவன் என்னைத் தீண்டப் போவதில்லை. இவளை நான் எப்படியாவது தூக்கிக் கொண்டு போய் ஒளித்து வைத்து, பிறகு இவனுடைய காதலைப் பெற வேண்டும்'' என்று தீர்மானித்து

அதிகாலையில் ஆசிரமத்துக்குள் நுழைந்தாள். ராமன் தடாகத் தண்டை சந்தி உபாசனையிலிருந்தான். சீதை ஆசிரமத்திலிருந்தாள். தனியாக இருந் தாள். இவளைத் தூக்கிப் போக இது தான் சமயம் என்று எண்ணினாள். அண் டையில் சோலையில் லக்ஷ்மணன் இருப்பதைப் பார்க்கவில்லை.

"வந்து நோக்கினள்,
வள்ளல்போய் ஒருமணித்
தடத் துச்

சந்தி நோக்கினன்
இருந்தது கண்டனள்;
தம் பி

இந்து நோக்கிய
நுதலியைக் காத்(து) அயல்
இருண் ட

சுந்தம் நோக்கிய
சோலையில் இருந்தது
கா ணாள்.

"தனிஇ ருந்தனள்,
சமைந்த(து)என் சிந்தனை
தாழ் உற்(று)

இனிஇ ருந்தெனக்(கு)
எண்ணுவதுஇல்' என
எண் ணாத்

துனிஇ ருந்தவல்
மனத்தினள் தோகையைத்
தொடர்ந் தாள்;

கனிஇ ரும்பொழில்க்
காத்தயல் இருந்தவன்
கண் டான்."

லக்ஷ்மணனுக்குச் சீதைமேல் யாரோ ஒருத்தி பாய்ந்ததாகத் தெரிந்தது. "நில்!" என்று சப்தம் போட்டுப் பாய்ந் தான். மயிரைப் பிடித்து உதைத்து வாள் உருவினான். அரக்கி தன்னுடைய பருத்த உருவத்தைக் கொண்டு லக்ஷ் மணனைத் தாக்கி ஆகாயத்தில் கிளம் பிப் போகப் பார்த்தாள். லக்ஷ்மணன் அவளை எளிதில் பிடித்துத் தள்ளி அங்கவீனம் செய்து விட்டு, "துஷ்டை ஜாக்கிரதை!" என்று எச்சரித்து, "போ" என்று துரத்தி விட்டான்.

சூர்ப்பனகை அப்போது தன் உண்மை உருவத்தோடு இரத்தப் பெருக்

# உலகின் முதல் தொண்டு நிறுவனம்!

**ரோ**ட்டரி சங்கம் என்றாலே சமுதாய சேவை என்று பொருள் கொள்ளும் அளவுக்கு இதன் நற்பணிகள் பிரசித்தம். பெரிய்ய சாதனை 'போலியோ'வை எதிர்த்துப் போர். 1981ல் 5000 இளம்பிள்ளைவாதக் கேஸ்கள் 1992ல் 400 ஆகக் குறைந்து போகும் அளவுக்கு இவர்கள் மத்திய, மாநில அரசுகளுக்கு உதவி, ஒத்துழைத்து வெற்றி கண்டனர்.

தவிர சமூகத்துக்குப் பல வகைகளிலும் தொண்டு செய்பவர்களுக்கு விருது வழங்கி கௌரவிக்கும் பழக்கமும் ரோட்டரிக்கு உண்டு. சமீபத்தில், செம்மங்குடி சீனிவாசய்யர், 'வானதி' திருநாவுக்கரசு, கோவை தொழிலதிபர் டாக்டர் கேசவமூர்த்தி, சென்னை மருத்துவர்கள் கிருஷ்ணசாமி, பிரேமா கிருஷ்ணசாமி - இவ்வளவு பேருக்கும் ரோட்டரி சங்கம் பால் ஹாரிஸ் விருது கொடுத்துக் கௌரவித்தது.

'**யா**ர் இந்த பால் ஹாரிஸ்? அவர் பெயரால் விருது வழங்குவானேன்?' என்று சென்னை ரோட்டரி சங்கத் தலைவர் எஸ். கிருஷ்ணனிடம் விசாரித்தோம் :

''பால் ஹாரிஸ் ஒரு வழக்கறிஞர். உலகிலேயே முதல் முதலாக, தொண்டு நிறுவனம் ஒன்றைத் தொடங்கிய அமெரிக்கர். தொண்டு நிறுவனத்துக்குப் பெயர் ரோட்டரி க்ளப். சிகாகோவில்தான் இதை ஆரம்பித்தார். வருடம் 1905. நோக்கம் மனிதகுல நம்பிக்கையை வளர்ப்பது; உலக அமைதிக்கும், சகோதர உணர்வுக்கும், நட்பு வளர்ச்சிக்கும் பாடுபடுவது.

''உறுப்பினர்கள் நகரின் வெவ்வேறு பகுதிகளில் சுழல் முறையில் சந்திக்கத் தொடங்கினார்கள். அதனால்தான் ரோட்டரி என்று பெயர். ஆரம்பத்தில் நாலே நாலு அங்கத்தினர்கள்தான். அவர்களில் ஒருவர் சிகை அலங்கார நிபுணர். பின்னர் ரோட்டரி ஃபவுண்டேஷன் அமைக்கப்பட்டு அது உலகளாவிய ஸ்தாபனமாக வளர்ந்தது.''

- சித்தார்த்

✱ பால் ஹாரிஸ்



காக ஓடித் தன் இனத்தாரைப் பெயரிட்டுச் சொல்லி பலமாகப் புலம்பினாள்.

''உரம்நெறிந்து விழஎன்னை
 உதைத்துருட்டி மூக்கரிந்த

நரன் இருந்து தோள்பார்க்க,
 நான் கிடந்து புலம்புவதோ!

கரன்இருந்த வனம் அன்றோ;
 இவைபடவும் கடவேனோ!

அரன்இருந்த மலைஎடுத்த
 அண்ணாவோ! அண்ணாவோ!''

''ஓ தம்பி கரனே, ஓ அண்ணா ராவணனே, ஓ இந்திரஜித்தே!''

''தானவரைக் கருஅறுத்துச்,
 சதமகனைத் தளையிட்டு,
வானவரைப் பணிகொண்ட
 மருகாவோ! மருகாவோ!

''கல்லிரும் படைத்தடக்கை
 அடல்கரதூ டணர்முதலா
அல்லிரும் கடர்மணிப்பூண்
 அரக்கர்குலத்(து) அவதரித்தீர்!

கொல்லிரும் படைக்கும்ப
 கருணனைப் போல்க் குவலயத்துள்
எல்லிரும் உறங்குதிரோ?
 யான் அழைத்தல் கேளீரோ''

என்று அரக்கிக்கு உள்ள பலமான தொண்டையைச் செலுத்திப் புலம்பினாள்.

**இ**து கம்பருடைய சித்திரம். சூர்ப்பனகை ராக்ஷஸப் பிறப்பை மறைத்துக் கொண்டு, ஒரு அழகிய பெண்ணுருவம் தரித்து, ராமனை வரித்தாள் என்பது கம்பருடைய கைவேலை. அதன் மேல் கவியின் சக்தி தன் பாட்டுக்கு வேலை செய்கிறது. வால்மீகி ராமாயணத்திலும் சூர்ப்பனகை ''காமரூபிணி'' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இஷ்டப்பட்ட வடிவத்தை எடுத்துக் கொள்ளும் சக்தி வாய்ந்தவள். ராமனைக் கண்டு மோகித்ததும், இந்தச் சக்தியைப் பயன்படுத்திக் கொண்டதும் இயற்கை நிகழ்ச்சியாகும்.

(தொடரும்)

# We have a soft corner for pensioners.



*LTC Presents*

# ***Pensioners Benefit Scheme***

Come and find the difference only LTC provides.

LTC accepts deposits for 12 months too!
(Pensioners include Senior Citizens, Ex-service Men, Widows, etc.)

LTC

**Personalised service**
**Special benefits**

***P.G. Saranyan.***
*Chairman*

**8 branches in Madras city and also at Coimbatore, Karaikudi, Madurai, Tirunelveli, Trichy.**

**This special scheme valid upto 31.12.93**



LAKSHMI TRADE CREDITS LTD.

*624, Anna Salai*
*MADRAS - 600 006.*
*Ph: 8276646, 8270311*

## கல்கி, 1954, ஆகஸ்டு 15

பிரபலமடைய வேண்டும் என்ற நோக்கம் இன்றி, ''கலை கலைக்காகவே'' என்ற எண்ணத்துடன் பரதநாட்டியக் கலையை ஆர்வத்துடன் பயின்றவர் வஸந்தா சுவாமி. ''கிருஷ்ணகான சபை'' போன்ற சில அரங்குகளில் அபூர்வமாகவே அவரது நடனத்தை ரசிகர்கள் பார்த்திருக்கக்கூடும். தொழிலதிபர் வி.டி. சுவாமியின் வாழ்க்கைத் துணைவியாரான வஸந்தா அண்மையில் காலமான போது, அவர் நடனத்தைப் பற்றி அமரர் ''கல்கி'' எழுதிய ஒரு கட்டுரை நினைவுக்கு வந்தது. ''கர்நாடகம்'' என்ற புனைபெயரில் ''கல்கி'' எழுதிய இக் கட்டுரை, வஸந்தாவின் கலை ஆற்றலை உணர்த்துவது மட்டுமின்றி, ''கல்கி''யின் விமர்சன ஆற்றலுக்கும் சிறப்பான ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

# வஸந்தாவின் நாட்டியம்

ரஸிகமணி டி.கே.சி.யுடன் பழகியவர்களுக்கு அடிக்கடி அவருடைய நினைவு உண்டாவது இயல்பு. நல்ல சங்கீதம், நாட்டியம் முதலிய நிகழ்ச்சிகளின் போது ரஸிகமணியின் நினைவு கட்டாயம் உண்டாகும். ஆனாலும், ''அடாடா! ரஸிகமணி டி.கே.சி. இச் சமயம் இல்லாமற் போனாரே?'' என்று வருத்தப்படும்படியான சந்தர்ப்பம் அடிக்கடி ஏற்படுவதில்லை. அபூர்வமாகத்தான் அத்தகைய உயர்தர கலை நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழும் வாய்ப்பு நமக்குக் கிடைக்கிறது. சில தினங்களுக்கு முன்பு ஸ்ரீ எஸ். எஸ். வாசன் அவர்களுடைய இல்லத்தில் குமாரி வஸந்தாவின் பரதநாட்டியம் நடந்த சமயத்தில் ரஸிகமணியின் நினைவு எனக்குப் பலமுறை வந்தது.

''ஆகா! இந்தப் பழமையான, தூய்மையான, எழிலும் நவீனமும் நிறைந்த, பாவ பூரணமான பரதநாட்டியத்தைப் பார்த்து மகிழ்ந்து பாராட்டுவதற்கு ரஸிகமணி டி.கே.சி. அல்லவோ இருந்திருக்க வேண்டும்? இந்த நாட்டியத்தை எவ்வளவு நன்றாக ரஸித்திருப்பார்? எவ்வளவு குதூகலமாகக் குமாரி வஸந்தாவைப் பாராட்டிப் பேசி உற்சாகப்படுத்தி இருப்பார்?'' என்று அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது.

பரதநாட்டியம் ஒரே சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்ட கலையான போதிலும், அதிலும் நாட்டிய ஆசிரியர்களின் பரம்பரையினால் பாணிகள் ஏற்பட்டிருக்கின்றன. ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் மூலமாக ஸ்ரீ கந்தப்ப நட்டுவனாரின் பாணி புகழ்பெற்றது. ஸ்ரீமதி ருக்மணி தேவியின் மூலமாகப் பந்தநல்லூர் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் பரதநாட்டிய பாணி உலகப் பிரசித்தியடைந்தது. ஸ்ரீ வழுவூர் ராமையாப் பிள்ளையின் பாணி, குமாரி கமலாவின் மூலமாகவும், மற்றும் பல சிஷ்யைகளின் மூலமாகவும் பிரபலமடைந்திருக்கிறது.

நம் சங்கீத - நாட்டியக் கலைகளுக்குப் பிறப்பிடமான தஞ்சாவூரில் ஒரு தனிப்பட்ட தூய்மையான நாட்டிய பாணி இருக்கிறது என்று குமாரி வஸந்தாவின் நாட்டியத்தின் மூலம் தெரிந்தது. மற்ற பாணிகளில் உள்ள பல நல்ல அம்சங்களுடன் அதில் நவீன எழில் மிகுந்திருக்கிறது. (ஆங்கிலத்தில் 'Grace' என்று அடிக்கடி சொல்கிறோமே, அதைத்தான் இங்கே 'நவீன எழில்' என்று குறிப்பிட்டிருக்கிறேன்.)

பரதநாட்டியத்தில் நாம் சில முக்கியமான அம்சங்களை எதிர்பார்க்கிறோம். அந்த அம்சங்கள் இருந்தால்தான் 'நல்ல பரத நாட்டியம்' என்று ஒப்புக் கொள்வோம். எல்லாவற்றுக்கும் அடிப்படையாக லய சுத்தம் இருக்க வேண்டும். தாளம் அணுவளவும் தவறாமல், அடைவுகளும் ஜதிகளும் எவ்வளவுக்கெவ்வளவு சாமர்த்தியமான பின்னல்களுடன் துரித காலத்தில் வருகின்றனவோ, அவ்வளவுக்கு நாட்டியக் கலையின் தரம் உயர்ந்து விடுகிறது. மற்றொரு முக்கியமான அம்சம், அபிநயப் பகுதிகளில் முகத்தில் காணப்படும் உணர்ச்சி பாவங்கள். இவை மிகத் தெளிவாக மகிழ்ச்சி, துயரம், அன்பு, கோபம், பயம், அலட்சியம் முதலிய பாவங்களை வெளிப்படுத்திப் பார்ப்பவர்களின் உள்ளத்திலும் பதியச் செய்ய வேண்டும்.

நாட்டியக் கலைவாணிகளில் சிலர் ஆட்டத்தில் சிறந்து விளங்குவார்கள். ஆச்சரியமான அடைவுகளையும் ஜதிகளையும் மிகத் துரித காலத்தில் பிரயோகித்துப் பிரமிக்க வைப்பார்கள். ஆனால், முகத்தில் உணர்ச்சி

'கர்நாடகம்'

களைத் தெளிவாகக் காட்ட முடியாத காரணத்தினால், ''அபிநயம் அவ்வளவு போதாது'' என்று சொல்லும்படியிருக்கும்.

அபிநயத்தில் சிறந்தவர்களுக்கு ஆட்டம் சுமாராகத்தான் வரும்.

தஞ்சை ஸ்ரீ சின்னைய்யாவின் சிஷ்யையான வஸந்தாவின் நாட்டியம், ஆட்டத்திலும் அபிநயத்திலும் சமமாகச் சிறந்து விளங்கியது.

உசேனி வர்ணத்திலும், காபி ராகத் தில்லானாவிலும் ஆட்டக் கலையின் சிறப்பு வெளியாயிற்று. ''தெள்ளத் தெளிந்ததையா!'' என்ற கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடலுக்குக் குமாரி வஸந்தா அபிநயம் பிடித்த போது, ரஸிகமணி டி.கே.சி. அவர்களை நான் அடிக்கடி நினைத்துக் கொள்ள நேர்ந்தது.

இவ்வாறு எல்லா நல்ல அம்சங்களும் பொருந்தியிருந்த ஆட்டத்தில் நளின எழிலும் இருந்தபடியால் இரட்டிப்பு மகிழ்ச்சி உண்டாயிற்று.

சாஸ்திரத்திலிருந்து அணுவளவும் பிறழாமலும், தாளம் தவறாமலும், சம்பிரதாய முறையில் சிலர் ஆட்டம் ஆடுவார்கள். ஆனாலும் ஏதோ குறைபாடு இருப்பதாகத் தோன்றும். அவர்கள் நாட்டியத்தைப் பார்ப்பதில் ரஸிகர்களுடைய உள்ளம் நிறைவு கொள்ளாது. காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்த்தால், ஆட்டத்தில் மற்ற எல்லாம் இருந்தும் நளினம் இல்லை என்பது தெரியவரும்.

நளினமில்லாத ஆட்டத்தில், கையைத் தூக்கி மறுபடி கீழே கொண்டு வரும் போது, கைகாட்டி மரத்தின் கை ரயில் சமீபத்தில் வந்ததும் 'டக்' என்று கீழே இறங்குவதையும், மறுபடியும் 'டக்' என்று மேலே போவதையும் ஞாபகப்படுத்திக் கொள்ளும்படி இருக்கும்.

இந்த நளினமில்லாத குறைபாடு, குறிப்பிட்ட நடன பாணியிலேயுள்ள குறையாகவும் இருக்கலாம்; அல்லது கற்றுக் கொண்டு ஆடுகிறவர்களின் குறையாகவும் இருக்கலாம்.

குமாரி வஸந்தாவின் ஆட்டத்தில் இந்தக் குறைபாடு சிறிதும் இல்லையென்று சொன்னால் மட்டும் போதாது. அவருடைய ஆட்டம் அபிநயம் எல்லாம், நளின எழில் பரிபூரணமாக நிறைந்த பரதநாட்டியக் கலைக்கு உதாரணமாக இருந்தது என்று சொல்ல வேண்டும்.

வர்ணம், தில்லானா முதலிய ஆட்டங்களில் ஜதிகளுடன், மேடையில் முன்னால் வந்து விட்டு, பின்னடை நடந்து போகும் போது குமாரி வஸந்தா அப்படியும் இப்படியும் தலையை அசைத்துக் கொண்டே நடந்தது, அன்னப் பறவையும் வன்ன மயிலும் கழுத்தை அசைத்து அங்கும் இங்கும் பார்த்துக் கொண்டு நடப்பதை நினைவூட்டுவதாயிருந்தது.

சமீப காலத்தில் தமிழ்நாட்டில் பரதநாட்டியம் மிக்க வியாபகமாகியிருக்கிறது. அநேக குடும்பங்களில் பெண் குழந்தைகளுக்குப் பரதநாட்டியம் கற்பித்து வருகிறார்கள்.

ஆயிரம் பெண் குழந்தைகள் பரதநாட்டியம் கற்றுக் கொண்டால் ஒருவர், இருவர் தான் பிரபலமும் புகழும் அடைய முடியும்.

பிரபலம் அடையும் ஆர்வத்தினால் சிலர் பரதநாட்டியத்தைக் கவர்ச்சிகரமாக்க முயல்கிறார்கள். பாம்பாட்டி நடனம், மார்வாரி நடனம், மீன் வலைஞர் நடனம் என்று



நவீன நடனங்களைச் சேர்க்கிறார்கள். மயில் தோகையைக் கட்டிக் கொண்டு மேடைக்கு வந்து மயில் நடனம் ஆடுகிறார்கள். மீசை வைத்துக் கொண்டு வந்து குறவன் ஆட்டம் ஆடுகிறார்கள்.

இப்படியெல்லாம் செய்வதனால் பரதநாட்டியம் கவர்ச்சிகரமாகும் என்று நம்புகிறார்கள்.

அவர்களுடைய நம்பிக்கைக்கும் ஆர்வத்துக்கும் நாம் தடையாக நிற்க வேண்டியதில்லை; ஏதோ நடத்திப் பார்க்கட்டும்.

ஆனால், குமாரி வஸந்தாவைப் போல் பரதநாட்டியக் கலையின் தூய்மை கெடாமல் அதைப் பயின்று போற்றி வருபவர்களை நாம் மகிழ்ந்து பாராட்டலாம் அல்லவா?

கதாநாயகி வேடங்களை ஏற்பதில்லை என்பதே நான் எடுத்த முடிவு. இத்தனை நாட்களாக மெயின் ரோல்கள் மட்டுமே ஏற்பது என்று கொண்டிருந்த கொள்கையை நான் மாற்றிக் கொள்ள வேண்டிய காலம் வந்து விட்டதை உணர்ந்தேன்.

'மேக் அப்' உதவியுடன் வயதைக் குறைத்துக் கொண்டு இளமையாக நடிப்பதைத் தவிர்ப்பது. அத்தகைய வாய்ப்புகள் வலிய வந்தாலும் மறுப்பது...

அப்படிச் செய்தால் வருமானம்...? அதைப் பெறுவதற்குக் குணச்சித்திர வேடங்களில் நடிப்பது என்று முடிவு செய்தேன். இந்த முடிவினால் அதிக வாய்ப்புகள் எனக்குக் கிடைக்கலாயின. அதனால் எனக்கு விருப்பமானவற்றை மட்டுமே தேர்ந்தெடுத்துச் செய்யும் வசதியும் ஏற்பட்டது. இரண்டே சீன்களில் வந்தாலும் 'ஜானகி நினைவில் நிற்கும்படி நடித்திருக்கிறார்' என்று பலர் பாராட்டும்படி நடிக்க முடிந்தது. அதன் மூலம் கிடைத்த வருமானத்துக்குத் தக்கபடி வாழத் தொடங்கினேன். அதிலும் எனக்குத் திருப்தி கிடைத்தது.

# சௌகார் ஜானகி

இந்த காலகட்டத்தில் நான் நடித்த ஒரு படம் 'தாய்க்குத் தக்க மக'. இந்த கன்னடப் படத்தில் நான் கதாநாயகன் ராஜ்குமாரின் அம்மாவாக நடித்தேன். ராஜ்குமாரின் ஜோடியாகப் பல படங்களில் நான் ஏற்கெனவே நடித்திருந்தாலும் எனது புதிய வேடத்தை ரசிகர்கள் ஏற்றுக் கொண்டார்



✱ அதிர்ஷ்டம் அழைக்கிறது

கள். தோளுக்கு மேல் வளர்ந்து விட்ட மகனை இன்னமும் குழந்தையாகவே பாவிக்கும் அம்மாவின் கதாபாத்திரம் என்னுடையது. அதில் முழு ஈடுபாட்டுடன் நடித்திருந்ததால் தொடர்ந்து பல 'கேரக்டர் ரோல்கள்' செய்ய எனக்கு வாய்ப்பு வர ஆரம்பித்தது.

# திரையுலக வாழ்க்கைக்கு 'குட்பை!'

இன்று அமைச்சராக உள்ள ஆர்.எம்.வி. தயாரித்த 'நல்ல பெண்மணி'யில் முத்துராமனுக்கு அக்காவாக நடித்தேன். 'அதிர்ஷ்டம் அழைக்கிறது' படத்தில் ரேஸ் பைத்தியமான கணவன் தேங்காய் சீனிவாசனுக்கு ஜோடி நான். 'மனைவி இறந்து விட்டாள்; அவள் இறுதிச் சடங்குக்குப் பணம் வேண்டும்...' என்று பொய் சொல்லி, அதனால்



✱ நல்ல பெண்மணி

கிடைத்த பணத்தில் ரேஸ் ஆடும் கணவன்! அதனால் மனைவி பாத்திரத்துக்கு எக்கச்சக்கமாக அனுதாபம் கிடைத்தது.

ஆரம்பத்தில் உற்சாகமாக இருந்தாலும் கேரக்டர் ரோல்களில் நடிப்பதிலும் தொய்வு உண்டாயிற்று. வந்து சேர்ந்த வேடங்கள் ஒன்றைப் பார்க்க ஒன்று அச்சில் வார்த்தெடுத்தது போல அமைய ஆரம்பித்தன. எனக்கு ரொம்பவும் அலுத்து விட்டது.

இந்தச் சமயத்தில் 'புதுப்புது அர்த்தங்கள்' படத்தில் எனக்கொரு வேடம் கொடுத்தார் பாலசந்தர். பூர்ணம் விஸ்வநாதனுக்கு மனைவியாக நடிக்கும் வாய்ப்பு. வயதான ஆங்கிலோ இந்திய தம்பதிகளான நாங்கள் கதாநாயக - நாயகிக்கு 'இன்ஸ்பிரேஷனாக' அமையும் கேரக்டர்கள்.

நினைவில் நிற்கக்கூடிய அந்தப் படத்துடன் திரையுலக வாழ்க்கைக்கு 'குட் பை' சொல்ல முடிவு செய்தேன். குழந்தைகளைப் பொறுத்தவரை, நான் என் கடமைகளை நிறைவேற்றி விட்டேன் என்றாலும் கூட நான் சம்பாத்தியத்தில் எனக்காக என்று சேமித்து வைத்துக் கொண்டது எதுவுமில்லை. என் குழந்தைகளுக்குப் பாரமாக இல்லாமல், நான் வாழ எனக்குத் தெரிந்த வழி, நான் வசித்து வரும் என் வீட்டையே வாடகைக்கு விட்டு விடுவது ஒன்றுதான். மிகச் சரியான நேரத்தில் நான் எடுத்த இந்த முடிவின்படி என் வீட்டை ஒரு ஸ்தாபனத்துக்கு லீசுக்கு விட்டு விட்டு, அதன் ஒரு சிறு பகுதியில் ஒதுங்கி, அமைதியாக இன்றைக்கும் வாழ்ந்து வருகிறேன்.

'சினிமா எக்ஸ்பிரஸ்' - 'டயனோரா' இணைந்து நடத்திய விழாவில் என் கலைச் சேவையைப் பாராட்டி 'கோல்டன் அவார்டு' கொடுத்தார்கள். அதைப் பெற்றுக் கொண்ட அதே மேடையில்தான் நான் சினிமா உலகிலிருந்து ஓய்வு பெறப் போவதாகவும் அறிவித்தேன்.

ரிடையர்மென்ட்டை அறிவித்த சில நாட்களில் என் மகள் அம்முலு என்னை அமெரிக்காவுக்கு அழைத்துப் போய் விட்டாள். அங்கேயே செட்டிலாகிவிடு வதுதான் என் திட்டம். நடிப்பு தவிர எனக்குப் பிடித்த இன்னொரு துறை சமையல் கலை என்பதால், லாஸ் ஏஞ்சலஸில் ஒரு தென்னிந்திய ரெஸ்டாரண்ட் ஆ ர ம் பி க் க எண்ணினேன். ஆனால் 40 வருடம் நடிகையாக வாழ்ந்து பிரபலமாகி விட்ட நான், ரெஸ்டாரண்ட் பிசினஸில் ஈடுபடுவதை என் மகன், மருமகன், மகள் யாருமே ஒப்புக் கொள்ள வில்லை. எனக்கு கார் டிரைவிங் தெரியாததால், நான் அவர்களைச் சார்ந்திருக்க வேண்டிய கட்டாயம். இந்த நிலையில், என் திட்டத்தைக் கைவிட வேண்டியதாயிற்று.

இடையில் சென்னைக்கு ஒரு வேலையாக வர நேர்ந்த சமயத்தில் விட்ட குறை தொட்ட குறையாக 'அழகன்' படத்தில் நடிக்கும் வாய்ப்பு என்னைத் தேடி வந்தது. தன்னை விட பல வருடம் மூத்தவரான மம்முட்டியைக் காதலிக்கும் மதுபாலாவுக்குப் பாட்டியாக நடித்தேன். இரண்டே சீன்களில் வந்தாலும் ஒரே 'கலகல'தான்!

நான் அமெரிக்கா திரும்ப வேண்டிய நாள் வரை 'அழகன்' படத்தின் எடிட்டிங் முடியாததால் என் பாத்திரத்துக்கான டப்பிங் வேலையை என்னால் முடித்துத் தர முடியவில்லை. படத்தை இயக்கிய கே.பி. சார் 'நீங்க கவலைப்படாம புறப்பட்டுப் போங்க; நாங்க எப்படியோ அட்ஜஸ்ட் பண்ணிக்கறோம்...' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

அவர் எப்படி அட்ஜஸ்ட் செய்தார் தெரியுமா...? வைஷ்ணவியைக் கொண்டு என் குரலை 'டப்' செய்து விட்டார்! பாட்டிக்குப் பேத்தி குரல் கொடுத்த முதல் சினிமா அழகனாகத்தான் இருக்க வேண்டும்!

அமெரிக்காவில் மகளுடன் ஆறு மாதங்கள் இருந்திருப்பேன். இத்தனை வருடங்கள் சுதந்திரமாக வாழ்ந்த எனக்கு, என் பெண்ணுக்குப் பாரமாக வாழ்வது போன்ற ஓர் உணர்வு ஏற்பட்டது. இந்தியாவுக்கே திரும்பி வந்து விடுவது என்று முடிவு செய்தேன்.

(தொடரும்)

படங்கள் உதவி :

ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

ஒவ்வொரு இ[illegible]லும் ஒளி வீசும் ஒப்பற்ற தூய்மை !




MANJARI

# அஷ்வினி

நீலநிற வாஷிங் பவுடர்

✓✓ அபார சக்தி

✓✓ அற்புதமான சலவை

தயாரிப்பு :

**ஸ்வாதி கெமிக்கல்ஸ் & டிடர்ஜன்ட்ஸ்**

258, ராஜீவ் நகர், நூம்பல், சென்னை – 600 077

வியாபார விசாரணைகள் வரவேற்கப்படுகின்றன.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka